# உங்கள் குழந்தையின் சீரான வளர்ச்சி, முதல் ஆண்டில் அவன் பெறும் ஊட்டத்தைப் பொறுத்துள்ளது.



## பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு
## அவனது வளர்ச்சிக்குத் தேவையான ஊட்டச்சத்துக்கள் அனைத்தும் நிரம்பியதாகும்

பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு, உங்கள் குழந்தையின் ஊட்டச்சத்துத் தேவைகளை மனதில் கொண்டு விசேஷமாகத் தயாரிக்கப்பட்டுள்ளது.

ஃபாரெக்ஸ் புரதம் செறிந்தது, கூடுதல் இரும்புச்சத்து உள்ளது, சரியான விகிதத்தில் கால்ஷியமும் ஃபாஸ்ஃபரஸும் அடங்கியது. குழந்தையின் வளர்ச்சிக்கு இவை அத்தியாவசியமாகும்.

ஏறக்குறைய நான்காவது மாதம் முதல், குழந்தைக்குப் பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு கொடுங்கள். அவன் ஆனந்தமாக வளருவதைக் காணுங்கள்.




பாசத்துடன் வழங்குவோர்
க்ளாக்ஸோ!

ஏற்கெனவே பால் அடங்கியது

CLARION/B/GX/8/203

# “எப்ப சாப்பிடுவோம்னு எங்களுக்கே தெரியாது!”

— பொம்மைத் தொழிலாளர்களின் பரிதாப வாழ்க்கை!



காஞ்சிபுரத்திலுள்ள அஸ்தகிரி 'தெருவிலா'. அந்தப் பெயர் சொல்லிக் கேட்டால் யாருக்கும் தெரியாது. 'பொம்மைக்காரத் தெரு' என்று சொன்னால்தான் பளிச் சென்று வழி காட்டுகிறார்கள். விநாயகர் சதுர்த்தியன்று வழிபடும் விநாயகர் உருவம் முதல், நவராத்திரிக் கொலுவில் வைத்து அழகு பார்த்து மகிழும் பலவிதக் கடவுள் பொம்மைகள்வரை — மூன்று ரூபாய் விலையிலிருந்து முந்நூறு ரூபாய் விலையுள்ள பொம்மைகள்வரை அந்தத் தெருவில்தான் செய்யப்படுகின்றன. இண்டி, பண்ருட்டி ஆகிய இடங்களிலும் இந்தப் பொம்மைகள் செய்யப்படுகின்றன என்றாலும் காஞ்சிபுரம் பொம்மைக்காரத் தெருவில் செய்யப்படும் பொம்மைகளுக்குத்தான் பெங்களூர் வரை மட்டுமல்ல; சிங்கப்பூர் வரையிலும் மவுசு. காதி கிராமோத்யோக் பவனில் விற்பனை செய்யப்படும்பொம்மைகள் அங்கேசெய்யப் படுபவைதான்.



கூலியாட்களோடு சரவண பக்தர்

நாங்கள் அந்தத் தெருவுக்குள் நுழைந்த போது முதலில் எங்களுக்குத் தென்பட்டது அந்தத் தெருவின் ஆரம்பத்திலுள்ள 'சுகாதார ஆய்வாளர் அலுவலகம் — தேசிய யானைக்கால் நோய்த்தடுப்பு திட்டக் கிளை' அலுவலகம்தான். சரி; பொம்மை செய்யும் அந்தத் தொழிலாளக் கலைஞர்களைப் பற்றிய ஆரம்பச் செய்திகளை அந்த அலுவலகத்திலுள்ளவர்களிடம்கேட்டுத்தெரிந்துகொண்டு பிறகு அவர்களிடம் பேட்டி காணச் செல்லலாம் என்ற நினைப்பில் அந்தச் சுகாதார ஆய்வாளர் அலுவலகத்துக்குள் நுழைந்தோம்.

உள்ளே நுழையும்போதே ஏதோ விட்டலாச்சாரியார் படத்திற்கான மர்ம மாளிகை செட்டுக்குள் நுழைவது போன்ற பிரமை எங்களுக்கு! அந்த அளவுக்குப் பாழடைந்து போன கட்டடம் அது. அதோடு அங்கு காணப்பட்ட விரிசல்களும், இடிபாடுகளும், வெள்ளையடிக்கப்படாத அந்தச் சுவர்களின் இருட்டும் சேர்ந்து கொண்டு எங்களைப் பயமுறுத்தின. தரையும் சென்னை நகர வீதிகள் மாதிரிக் குண்டும் குழியுமாகக் காட்சியளித்ததால் நாங்கள் பயத்தின் உச்சிக்கே போய் விட்டோம். அங்குள்ள அலுவலர்களை விசாரித்தபோது, "அரசு சம்பந்தப்பட்ட அலுவலகம் என்றால் இதெல்லாம் சகஜம்தான் சார்!" என்று மிகவும் சாதாரணமாகச் சொன்னார்கள். சுகாதார ஆய்வாளர் அலுவலகத்தின் அந்த அசுத்தத்திலிருந்து சத்தம் போடாமல் நழுவி வீதிக்கு வந்தோம்.

அந்தத் தெருவில் இப்போது சுமார் பதினைந்து குடும்பங்கள் இந்தப் பொம்மைகள் செய்யும் குடிசைத் தொழிலில் ஈடுபட்டிருக்கின்றன. 1940—ஆம் ஆண்டு ஒரேயொரு குடும்பம்தான் இந்தத் தொழிலைத் தொடங்கியதாம். அதன் பிறகு அலுமினியம், எவர்சில்வர் பாத்திரங்களின் உபயோகம் அதிகமாகிக் கொண்டே வந்ததால் மண்பாண்டங்கள் செய்யும் இனத்தவர்கள் மிகவும் பாதிக்கப்பட்டார்கள். அதனால்தான் மெல்ல மெல்ல அந்த இனத்தவர்கள் பொம்மை செய்யும் தொழிலுக்கு வர ஆரம்பித்தார்களாம். இப்போது ஏறத்தாழ அனைவருமே பொம்மைத் தொழிலுக்கு வந்துவிட்டார்கள்.

ஆரம்பத்தில் எல்லாப் பொம்மைகளையும் கையால்தான் செய்து கொண்டிருந்தார்கள். அதனால் ஒரு பொம்மை செய்வதற்கே ஏகப்பட்ட நேரம் செலவானதோடு, வருமானமும் மிகமிகச் சொற்பமாக இருந்ததால், வயிற்றுப்பாடே பெரும்பாடாக இருந்ததாம். அதனால் யாரோ ஒருவர் களிமண்ணால் செய்வதை விடக் காகிதக் கூழையும் சுண்ணாம்பையும் கலந்து செய்தால் என்ன என்று சிந்தித்துச் செய்துபார்க்க(இதன் ஆதிகர்த்தாயாரென்று யாருக்கும் சரியாகத் தெரியவில்லை) அந்தப் பொம்மை கெட்டியாக இருந்ததோடு, களிமண்ணுக்காக அலையும் சிரமமும் இல்லாமல் போகவே அனைவரும் காகிதக் கூழ் கலவையையே பயன்படுத்த ஆரம்பித்துவிட்டார்களாம். அதன் பிறகு கையால் செய்யும் வேலையும் மிச்சமாகி இப்போது 'மோல்டு'கள் மூலம் மிகச் சுலபமாக — ஒரே நாளில் ஒருவரே பல பொம்மைகளைச் செய்து முடிக்கும் அளவுக்கு முன்னேறிவிட்டார்களாம்!

பொம்மைகளைச் செய்துவிட்டால் மட்டும் போதுமா? அவற்றை விற்பனை செய்ய வேண்டாமா? "ஆரம்பத்தில் நாங்களெல்லாம் கொத்தடிமைகளைப் போலத்தான் வாழ்ந்தோம். நாங்கள் செய்யும் பொம்மைகளை



விற்பதற்காகப் பெரிய பெரிய கோயில் நிர்வாகிகளின் தயவைத்தான் நாட வேண்டியிருந்தது. அதனால் அவர்கள் எங்களைப் படுமோசமாக நடத்தினார்கள். இருந்தாலும் அவர்களின் தயவு இல்லாவிட்டால் வாழ முடியாத நிலை என்பதால் நாங்களும் பேசாமல் இருந்தோம். ஆனால் இப்போது அப்படியல்ல; 'காதி கிராமோத்யோக் பவன்' எங்களிடமிருந்துதான் பொம்மைகள் வாங்குகின்றன. வெளியூர்களிலிருந்தும் நேரிடையாகவே எங்களுக்கு ஆர்டர்கள் வருகின்றன. அதனால் பரவாயில்லை. இருந்தாலும் எல்லாப் பொருள்களின் விலையும் ஏறிக் கொண்டிருக்கும் இந்தக் காலத்திலும் எங்களுடைய பொம்மைகளின் விலை மட்டும் ஏறமாட்டேன் என்கிறது. (ஆனால் கிராமோத்யோக் பவன் மட்டும் ஆண்டு தோறும் விலையைக் கூட்டி விற்கிறதாம்!) நாங்கள் செய்யும் பொம்மைகள் சூரிய வெப்பத்தில் நன்றாகக் காய வேண்டும் என்பதால் மழைக் காலத்தில் எங்கள் தொழில் பாதிக்கப்படுகிறது. அதையெல்லாம் எங்களால் சரிகட்ட முடியவில்லை! என்றார் பலகாலமாக அங்கே பொம்மை செய்து கொண்டிருக்கும் சரவண பத்தர் (குயவர்).

அந்தப் பொம்மைக்காரத் தெருவிலேயே



• நானும் ராஜவேல், தெய்ப்பேன்....



• ராமநாதன்



• கலியன்

சுமார் பதினைந்து கூலியாட்களை அமர்த்திக் கொண்டு பொம்மை செய்துவரும் பெரிய முதலாளி இந்தச் சரவண பத்தர்தான். அவருக்கே இந்த நிலைதான் என்றால் கூலியாட்களில்லாமல் தாங்களே பொம்மை செய்து பிழைப்பு நடத்திக் கொண்டிருக்கும் மற்றக் குடும்பங்களின் நிலை என்ன?

கலியன் என்பவரைச் சந்தித்துக் கேட்டோம். ''நான், என் மனைவி, மட்டுமல்ல; பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருக்கும் என் மகன், மகள் ஆகியோரும் பள்ளி நேரம் போக மற்ற நேரங்களில் எங்களுக்கு உதவி செய்கிறார்கள். அப்படியிருந்தும் மாதம் நானூறு ரூபாய் கிடைத்தால் அதுவே அதிகம். அதில்தான் எங்கள் குடும்பத்திலுள்ள நான்கு பேரும் ஜீவிக்க வேண்டும். இந்த வருமானமும் மழைக் காலத்தில் பாதிக்கப்படும். அப்போதெல்லாம் ஏறத்தாழ நாங்கள் பட்டினிதான்.

''இந்தத் தொழிலுக்குப் பல்வேறு விதமான பொம்மைகளையும் செய்வதற்கான மோல்டுகள்தான் முக்கியம். அவற்றை மதுராந்தகத்திலுள்ள முத்து என்பவர்தான் எங்கள் அனைவருக்கும் செய்து தருகிறார். ஒரு மோல்டுக்கு அதன் நுட்பமான வேலைப்பாடுகளுக்குத் தகுந்தபடி பணம் கொடுக்க வேண்டும். என்னிடமிருப்பது இரண்டு வகையான மோல்டுகள்தான். மற்றவற்றை வாங்கப் பணம் இல்லை. இப்போதிருப்பவற்றை வாங்கக் கூட நான் மிகவும் சிரமப்பட்டேன். அதற்காக வைஸ்யா பாங்கில் கடன் வாங்கினேன். இடையில் சில மாதங்கள் நான் நோய்வாய்ப்பட்டுவிட்டதால் சில தவணைகளைக் கட்ட முடியாமல் பிறகு நலமானதும் கட்டி முடித்தேன். ஆனாலும் இப்போது எனக்கு மறுபடியும் கடன் கொடுக்க மறுக்கிறார்கள். நீங்கள் ஏதாவது சிபாரிசு செய்து வாங்கித் தரமுடியுமா சார்? கொடுத்தால் புண்ணியமாய்ப் போகும்!

''எனக்கு 68—ஆம் ஆண்டு திருமணம் நடந்தது. அப்போது ஒரு பட்டுப் புடவையின் விலை வெறும் தொண்ணூறே ரூபாய்தான். அப்படியிருந்தும் என் மனைவிக்குப் பட்டுப் புடவை வாங்கிக் கொடுத்து என்னால் திருமணம்செய்துகொள்ள முடியவில்லை. காஞ்சிபுரம் பட்டுக்குப் பேர் போனது. அந்த ஊரிலேயே நான் இருந்தும் அந்தப் பட்டை இன்னமும் என்னால் நெருங்க முடியவில்லை. தொண்ணூறு ரூபாய்க்கு விற்ற அந்தக் காலத்திலேயே என்னால் வாங்க முடியவில்லையென்றால் நூற்றுக் கணக்கான ரூபாய்க்கு விற்கும் இப்போது நான் பணத்துக்கு எங்கே போவேன்?'' என்றார்.

கலியனின் மனைவி ஆண்டாளைக் கேட்டபோது, ''பட்டுப் புடவை வேண்டுமென்று நான் அழவில்லை. நேரத்துக்கு நேரம் என் குழந்தைகளுக்குச் சாப்பிடக் கொடுத்தாலே போதும். எப்போது சமைப்போம், எப்போது சாப்பிடுவோம் என்று எங்களுக்கே தெரியாது. பொம்மைகள் விற்பனையாகாவிட்டால் நாங்கள் பட்டினிதான். சாப்பிடும் நாட்களில்மட்டும்நாங்கள் அப்படியென்னத்தைச் சாப்பிட்டு விடுகிறோம். சோறு ஆக்குவோம். ஒரேயொரு சாம்பார் மட்டும்தான் வைப்போம். ரசம் வைப்பதற்குக்கூட முடியாது. ஒரேயொரு முறைதான் சமைப்போம். அதுதான் மூன்று வேளைகளுக்கும். காலையில் எப்போதுமே நீராகாரம்தான்! அதுவும் இருக்கும் சிறிது சோற்றையும் குழந்தைகளுக்குக் கொடுத்துவிட்டு நானும் அவரும் வெறும் தண்ணீரைத்தான் காலையில் குடிப்போம். இதுதான் எங்கள் அன்றாட நடைமுறை. மற்றபடி பொரியல், ரசம், மோர் என்பதெல்லாம் எப்போதாவது வரும் பண்டிகைக் காலங்களில்தான்!'' என்றார் அவர்.

இவர்களுடைய நிலையேதான் பொம்மைத் தொழிலில் ஈடுபட்டிருக்கும் மற்றக் குடும்பங்களின் நிலையும்! 'கல்லுடைக்கும் பார்ப்பானைக் கண்டதுண்டா?' என்று அவ்வப்போது எழுப்பப்படும் கோஷங்களெல்லாம் வறுமையின் விலாசம் என்பது அக்ரஹாரத்தில் இருக்கவே இருக்காது என்ற தவறான எண்ணத்திலும் — பிராமணர்கள் உடல் உழைப்புச் செய்ய முன்வரமாட்டார்கள் என்ற எண்ணத்திலும் எழுப்பப்படுபவைதான்.! அந்த கோஷங்களைப் பொய்யாக்கும் வகையில் சரவண பத்தரிடம் தினக் கூலிக்கு வந்து காகிதக்கூழ் பொம்மை செய்து கொண்டிருக்கிறார் ராமநாதன் என்னும் பிராமண இளைஞர். அவரிடம் கேட்டபோது, "நேர்மையான முறையில் செய்யும் எந்தத் தொழிலும் கேவலமில்லை. இந்தத் தொழில் செய்வதையும் நான் கேவலமாக நினைக்கவில்லை; மகிழ்ச்சியோடுதான் செய்து கொண்டிருக்கிறேன்! இத் தொழிலில் அதிக வருமானமில்லை என்பதைத் தவிர வேறு உணர்வுகள் எனக்கில்லை!" என்றார் அவர்.

—ஆக பொம்மைசெய்யும்தொழிலாளர்களைச் சந்தித்தபோது, அவர்கள் ஒவ்வொருவரும் திரும்பத் திரும்பச் சொன்ன ஒரே வாக்கியம், ''நாங்கள் எப்பசாப்பிடுவோம்னு எங்களுக்கே தெரியாது!'' என்பதுதான். ஆட்சியில் இருப்பவர்களுக்கோ, ஆலைகளில் பணியாற்றி, தொழிற்சங்க ரீதியாகப் போராடும் சக்தி பெற்ற தொழிலாளர்கள் மட்டுமே தொழிலாளர்களாகத் தென்படுகிறார்கள். ஒவ்வொரு தொழிலாளர் தினத்தின் போதும், 'இந்த அரசு தொழிலாளர் நலனுக்காகவே பாடுபடும் அரசு' என்று மேடைகள் தோறும் பிரகடனப்படுத்திக் கொண்டிருக்கும் அரசியல்வாதிகளுக்கு பொம்மை செய்யும் இவர்களும் இவர்களைப் போன்ற பல்லாயிரக்கணக்கானோரும் தொழிலாளர்களாகவே தெரியாமல் போனதுதான் மோசடி.

**— இளங்கோவன்**

அட்டை வண்ணப்படமும்,
படங்களும்: **மனோ**

விநாயகர் ஓவியம்: **வேதகணபதி**



கல்கி நிறுவனத்தின் பாகஸ்தர்களில் ஒருவரும் ''கல்கி கண்ணன்'' என்றே பம்பாயில் அனைவராலும் அன்புடன் அழைக்கப் படுகிறவருமான திரு ஆர். கண்ணன் அவர்களின் மகன் செல்வன் ஸ்ரீனிவாசனு(ராஜு)க்கும், FACITASIA LTD. Vice Chairman திரு. சந்திரசேகர் அவர்களின் செல்வ மகள் குமாரி சுதாவுக்கும் சென்னையில் அண்மை யில் வெகு விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது. கல்கி குடும்பத் தின் தலைவர் திரு சதாசிவம் — திருமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மி தம்பதி யும் மற்றும், திரு செம்மங்குடி ஸ்ரீனிவாச அய்யர், திரு வி. டி. சுவாமி ஆகியோர் முன்னின்று நடத்தி வைக்க, ஏராளமான அன்பர்களும் நண்பர்களும் உறவினர்களும் கலந்து கொண்ட இந்த வைபவத்தை யொட்டி மாலை நடந்த வரவேற்பின்போது மாண்டலின் மாஸ்டர் ஸ்ரீனிவாசனின் இன்னிசைக் கச்சேரி இதயங்களை நிறைவித்தது.

பின்னர், கல்கி கண்ணனின் பம்பாய் நண்பர்களும் அன்பர் களும் பெருந்திரளாகக் கூடி மகிழ்ந்த வரவேற்பு வைபவம் பம்பாயிலும் வெகு விமரிசையாக நடந்தேறியது. மணமகன் உயர் அதிகாரியாகப் பணியாற்றும் ஹிந்துஸ்தான் லீவர் கம்பெனியிலிருந்து மட்டுமின்றி பம்பாய் நகரின் பல்வேறு துறைப் பிரமுகர்களும் விஜயம் செய்திருந்த தானது பம்பாய் நகரமே மணமக்களை வாழ்த்தியதாக அமைந்தது.

வாழ்க ராஜு — சுதா!

வாழ்க பல்லாண்டு!


ஜனநாயகம்
ஸ்மைல் ப்ளீஸ்!
உக்காந்துக்குங்க.. உக்காந்துக்குங்க!
இலாகா மாற்றம்
வீரப்பன்
பணத்தைக் கொடுங்க!
கொடுத்த பணத்துக்கு மொதல்ல கணக்கு கொடு!
ரொம்ப காம்ப்ளிகேட் கேஸ்!
கடவுள் தான் காப்பாத்தணும்!

1985 செப்டம்பர் 15
மலர்: 44 இதழ்: 7
குரோதன ஆவணி 30



கல்கி



# கொலைவெறியைத் தூண்டும் கொலைவெறி!

குடித்தவன் போதை ஏறி மேலும் குடிப்பதுபோல் கொலை வெறி போதை ஏறினால் மேலும் கொலை வெறியையே தூண்டுகிறது. நேற்றுவரை சிங்களவர் தமிழரையும், தமிழர் சிங்களவரையும் கொன்று குவித்தனர். இன்று தமிழனே, தமிழர்களைக் கொன்றிருக்கிறான். ஈழத்தின் முன்னாள் தமிழ் எம். பி.க்கள் படுகொலை செய்யப்பட்டுள்ளனர். இந்தப் படு கொலைகளைச் செய்தவர்கள் தமிழ்ப் பயங்கரவாதிகளே என்று கருதப்படுகிறது. தமிழ் ஈழப் போராளிகளின் பல பிரிவினரும் ஒருவர் மீது ஒருவர் பழி சுமத்தித் தங்கள் மீது பழி விழாமல் காத்துக் கொள்ள முயலுகின்றனர். இதைப் பார்க்கத் துயரையும் கோபத்தையும் விடவும் இவர்கள் நிலை கண்டு பரிதாபமே மேலோங்குகிறது! இந்த அளவுக்கா தமிழன் தாழ்ந்து போக வேண்டும்? சிங்களவரை மட்டுமின்றித் தமிழர்களையே தமிழர் கொன்றுதான் தமிழ் ஈழம் பெற வேண்டும் என்றால் அத்தகைய தமிழ் ஈழம் பெறத் தகுதியுடையதுதானா? குருதிச் சேற்றில் அமையும் தமிழ் ஈழத்தில் ஜனநாயகப் பயிர் விளையுமா?

கொஞ்சம் கொஞ்சம் இருதரப்பிலும் விட்டுக் கொடுத்தால் போதும், பிரச்னைக்குத் தீர்வு காணலாம். இலங்கைத் தீவை அமைதிக் கேந்திரமாக்கலாம். உலக நாட்டவரெல்லாம் காண ஆவலோடு ஓடி வரும் அழகு கொஞ்சும் பூவுலக சொர்க்க பூமியாக மாற்றலாம். ஆனால் ராஜீவின் இந்த முயற்சிக்கு இருதரப்பிலும் ஒத்துழைப்பு இல்லை.

முதலில் அமைதி திரும்ப வேண்டும். அந்த அமைதி காப்பாற்றப்படவும் வேண்டும். இதற்கு சர்வதேச அமைதிப்படை ஒன்றினை ஐ. நா. சபை இலங்கைக்கு அனுப்புதல் அவசியம். இது ராஜீவின் முயற்சிக்கு உலக நாடுகள் தார்மீக ஒத்துழைப்புத் தந்ததாகவும் ஆகும். மனச்சாட்சிகள் இருதரப்பிலும் விழிப்படைந்து பேச்சு வார்த்தைகள் வெற்றி பெற்றதுமே அமைதிப்படை வாபஸ் பெறப்படலாம்.

* * * * *

ஈழத்தில் அமைதி நிலவு முன்னர் இன்னும் எத்தனை பேர் பலியாக வேண்டுமோ என்று எண்ணும்போதே பஞ்சாபில் தேர்தல் நடந்து ஜனநாயகம் தழைக்குமுன் இன்னும் எத்தனை படுகொலைகள் நடக்குமோ என்ற சோகத்திலும் நெஞ்சம் கனக்கிறது.

திம்பு பேச்சு வார்த்தைகள் வெற்றி பெறக்கூடாது என்பதற்காக இலங்கையில் முந்நாள் தமிழ் எம். பி.க்கள் படுகொலை செய்யப்பட்டார்கள் என்றால் பஞ்சாபில் தேர்தல் நடக்கக்கூடாது என்பதற்காக மக்கென், லோங்கோவால், இன்று தில்லி நகராட்சி இ. காங்கிரஸ் உறுப்பினர் அர்ஜுன் தாஸ் என்று ஒருவர் பின் ஒருவராகப் பலியிடப்படுகின்றனர் — சீக்கிய பயங்கரவாதிகளால். இறுதி வெற்றி பெறப் போவது ஜனநாயகமா, பயங்கரவாதமா என்ற நிலை தோன்றிவிட்டது. ஜனநாயகம் அடிபணியக் கூடாது என்று கூறிக் கொண்டிருந்தால் போதாது. பயங்கரவாதிகளுக்கு எதிராக அரசு வன்மையாகச் செயல்படவும் வேண்டும். இதற்குச் சீக்கியப் பொது மக்களின் ஆதரவு நிச்சயம் அரசுக்குக் கிடைக்கும்.

புது தில்லி போலீஸ் பயங்கரவாதிகளை எதிர்த்துச் செயல்படும் தகுதி பெற்றிருப்பதாகத் தோன்றவில்லை. பயங்கரவாதிகளுடன் போராடி வெற்றி பெறுவதற்கென்றே தனியே ஓர் அமைப்பை, நம்பிக்கைக்குரிய, திறமை மிக்க ஒரு தலைமையின் கீழ் உருவாக்குவது நலம். முள்ளை முள்ளினால் எடுக்க வேண்டியிருந்தால் தயங்கலாமா? கூடாது.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா—பாரதியார்.



நீங்கள் கேட்டவை

— தராசு

மு. மதிவாணன், அரூர்

? தமிழக அமைச்சர்களின் கையில் அலாவுதீனின் அற்புத விளக்குக் கிடைத்தால் எப்படி இருக்கும்?

! இப்போது இல்லே என்று யார் சொன்ஞர்கள்? அதிகாரம் என்ற அற்புத விளக்கு அவர்களிடம் இருப்பது உங்களுக்குத் தெரியவில்லையா! அதைப்பொதுநலனுக்குளப்படிப் பயன்படுத்துகிருர்கள், சுயநலனுக்கு எந்த அளவுக்குப் பயன்படுத்துகிருர்கள் என்பதைப் பொறுத்துத்தான் தமிழகத்தின் எதிர்காலம்.

* எம். இராசன், கிருஷ்ணகிரி.

? ரேஸ்கோர்ஸ் ரோடில் இருக்கிறீர்களே, 'கிண்டி ரேஸ்' பற்றி உங்கள் அபிப்ராயம் என்ன?

! இது மாதிரியான சூதாட்டங்கள் அவசியம் ஒழிக்கப்பட்டாக வேண்டும். சென்னே அண்ணு மேம்பாலத்துக்கருகே உள்ள "வந்தியத்தேவன்" சிலே ஓரளவுக்கு மட்டுமின்றி முழுதுமாக அர்த்தமுடையதாக வேண்டும்.

* ஆர். சுப்பராவ், திருக்கோவிலூர்.

? 'கட்சி மாறுவதற்கு நான் ஒன்றும் அரசியல் விபச்சாரி அல்ல' என்று மனேகரன் எம். ஜி. ஆரிடம் கூறியதைக் கேட்டு எனக்குப் புல்லரித்தது. ஆமாம், நாஞ்சிலாருக்கு இந்த ஞானேதயம் எப்போது உதயமாயிற்று?

! மனேகரனேப் பொறுத்தவரை இராவிட இயக்கங்களுக்குள் மாறி மாறி முகாமிடுவது ஒன்றும் கட்சி மாறுதலே அல்ல. காங்கிரஸ், ஜனதா.... போன்ற கட்சிகளுக்கு மாறுவதுதான் அந்த லிஸ்டில் சேரும். இதை அவரே சொல்லியிருக்கிருர்.

* ஆ. வெங்கடேஷ், சென்னே—82.

? காதல் தோல்வி என்பது ஆண்களுக்கு மரண அடியாகவும் பெண்களுக்குக் கொசுக்கடியாகவும் அமைந்துவிடுவதன் ரகசியம் என்ன?

! மரண அடி, கொசுக்கடி என்பதெல்லாம் அவரவருக்கு இருக்கும் காதல் உணர்வின் ஆழத்தைப் பொறுத்தது. ஒருவேளே உங்கள் விஷயத்தில் நீங்கள் மனப்பூர்வமாகக் காதலித்திருக்கலாம். ஆனுல் எதிர்த் தரப்பில், உங்கள் மனப்பூர்வமான காதலே மறுதலித்து, உங்களே வருத்தப்படச் செய்ய விரும்பாமல், மௌனமாக இருந்திருக்கலாம். உங்கள் மேலுள்ள இரக்கத்தின் பொருட்டுக் காட்டிய மௌனத்தை நீங்கள் உங்கள் காதலுக்கான பச்சைக் கொடியாகக் கருதியது யார் குற்றம்? அதனுல்தான் உங்களுக்கு மரண அடி. எதிர்த் தரப்பில் கொசுக்கடி. ஆக, இதெல்லாம் இரு தரப்பினருக்கும் பொதுவானதுதான்.

* என். செந்தில்குமார், மயிலாடுதுறை.

? மூப்பனருக்கு 'இளைய காமராஜ்' என்று பட்டம் கொடுத்திருப்பது பற்றி.....?

## காதல் தோல்வி ஆண்களுக்கு மட்டும் மரண அடி ஆவதேன்?

! உங்களுக்கேன் பொருமை? ஆசையாக இருந்தால் சொல்லுங்கள், 'சிந்தனேச் செல்வன்' செந்தில்குமார் என்று நானே உங்களுக்கு ஒரு பட்டம் தருகிறேன். உண்மையிலேயே அந்தப் பட்டத்தை வழங்கும் தகுதி எனக்கும் பெறும் தகுதி உங்களுக்கும் இருக்கிறதா என்று இன்றையச் சூழலில் யார் கேட்கப் போகிருர்கள்!

* வி.எம்.கருணுகரன், சின்னதாமல்செருவு.

? தமிழக அரசியல் நாடகத்தில் தங்களுக்

குப் பிடித்த (அ) பிடிக்காத காட்சிகளைப் பற்றி?

! இங்கே நடப்பது நாடகம் அல்ல; மோடி மஸ்தான் வேலை!

* த. சத்தியநாராயணன், சென்னை—23.

? கமலஹாசன் வாரிசு ஸாரிகா வயிற்றில் வளருகிறதாமே?

! அப்பாடா! இந்த தேசத்தைப் பலகாலமாக உலுக்கிக் கொண்டிருந்த மிகப் பெரிய பிரச்னை ஒன்று தீர்ந்தது போங்கள்!

* கோடை சேகர், கொடைக்கானல்.

? எம். ஜி. ஆரின் அடுத்த நடவடிக்கை என்னவாக இருக்கும்?

! இப்போது கப்பல் வாங்கியாயிற்று. இனி, முன்பே அறிவித்ததற்கிணங்கச் சென்னைப் புறநகர்ப் பகுதிகளில் அடிக்கடி கொள்ளையடித்து வரும் முகமூடிக் கொள்ளையர்களைப் பிடிப்பதற்காகத் தாழப் பறக்கும் விமானம் வாங்க எந்த நாட்டுக்குப் போகலாம் என்ற யோசனையாகத்தானிருக்கும்.

* அ. கயல்விழி, விருத்தாசலம்.

? மு. மேத்தாவின் பாடல்களைப் பற்றி....?

! பாடல்கள் என்பதற்குப் பதில் கவிதைகள் என்று கேட்டிருந்தால் பதில் சொல்லியிருக்க முடியும்.

* ஜி. ராஜசேகர், வளையமாபுரம்.

? ஒரே கார்டில் பல கேள்விகள் கேட்பது; ஒரேயொரு கேள்வி மட்டும் கேட்பது, உங்களுக்கு எது பிடிக்கும்?

! பதில் எழுதுவதற்கான இடமும் பதிலைப் பெறக்கூடிய தகுதியும் இருக்கும்போதுதான் எழுதுவதற்கான உற்சாகமே பிறக்கிறது.

* கே. வைத்தியநாதேஸ்வரன், நெய்வேலி.

? கல்கி அவர்களின் அந்நாளைய சினிமா, நாடகவிமர்சனங்களில் நல்லவற்றைத்தேடிப் பாராட்டியதைவிட, குறைபாடுகளைத் தேடித் தேடி துருவித் துருவிச் சாடும் தன்மையே அதிகம் இருந்ததுபோல் தெரிகிறதே! (தினமணிகதிர் 18.8.85 பக்கம் 40—ஸ்ரீராமானுஜர்—அறந்தை நாராயணன்) என்ன சொல்கிறீர்?

! கல்கி அவர்கள் பேனாவைக் கையில் எடுக்கும்போது தமக்கு வேண்டியவர்கள், வேண்டாதவர்கள் — செல்வாக்குடையவர்கள் — செல்வாக்கில்லாதவர்கள் என்றெல்லாம் கணக்குப் பார்த்தது கிடையாது. எதிர்க்க வேண்டியதை எதிர்த்த வேகத்துடனேயே பாராட்ட வேண்டியவற்றையும் மனமுவந்து பாராட்டியிருக்கிறார். அண்ணாவின் 'ஓர் இரவு' நாடகத்தைப் பார்த்துவிட்டு 'இதோ இருக்கிறார் தென்னாட்டின் பெர்னாட்ஷா!' என்று பாராட்டியதெல்லாம் பாராட்டு இல்லையா? இதுபோல் எத்தனையோ!



* சம்மன் இன்றி...



* ஞானோதயம்!

* ஆர். கே. லிங்கேசன், மேலகிருஷ்ணன் புதூர் *

? முதல்வரின் சத்துணவுக் கூடம் என்று எழுதுவதைப் போல முதல்வரின் கள்ளுக் கடை — சாராயக் கடை என்று ஏன் எழுதக் கூடாது?

! நியாயமான கேள்வி. அ.இ.அ.தி.மு.க. வினரிடம் நாணயம் இருந்தால் நீங்கள் சொல்வது போல்தான் எழுத வேண்டும். அல்லது சத்துணவுக் கூடங்களிலிருந்து முதல்வர் என்ற சொல்லை நீக்கி விடவாவது செய்ய வேண்டும். மக்களின் வரிப் பணம்தானே செலவாகிறது சத்துணவுத் திட்டத்துக்கு.

* பழ. சண்முகம், வேதாரண்யம்.

? 'இலங்கைத் தமிழர் தலைவர்கள் நாடு கடத்தப்பட்டது ராஜீவ் காந்திக்குத் தெரியாமலேயே அதிகாரிகள் எடுத்த நடவடிக்கை' என்று அமைச்சர் காளிமுத்து கூறுவது நகைச்சுவையாயில்லை?

! இப்படி அடிக்கடி சம்மன் இல்லாமல் ஆஜராகி அசடு வழிவதை அவர் என்றுதான் நிறுத்தப் போகிறாரோ தெரியவில்லை!

* இரா. ஜெய்சங்கர், செம்பனார்கோயில்.

? கலைஞர் நடத்தும் போராட்டத்தினால் பாதிக்கப்படுவது அரசாங்கமா அல்லது தொண்டர்களா?

! யார் எந்தப் போராட்டம் நடத்தினாலும் பெரும்பாலும் அதிலெல்லாம் நிஜமான பிரச்னைகள் பின்னுக்குத் தள்ளப்பட்டுப் பாதிக்கப்படுவது பொதுமக்கள்தான்!

* ரூ 10 பரிசு பெறுபவர்:

ஆர். கே. லிங்கேசன்,
மேலகிருஷ்ணன் புதூர்,
பள்ளம் (P.O.)
குமரி மாவட்டம்.

* இளைய காமராஜர்.



* அர்த்தமுள்ளதாகட்டும்.



## 7. "சொல்லாத வார்த்தையைக் கேட்டேண்டி, தோழீ!"

> தான் அடியாருக்கு வசப்பட்டிருப்பதை ஞானியருக்கு உணர்த்தவே ஆண்டவன் ஆய்ப்பாடியில் குழந்தை விளையாட்டுச் செய்து இன்பூட்டினன்.
>
> —பாகவதம் 10—11—9



மணமற்ற இந்தக் காட்டு ரோஜாவை ஏன் ராஜா மோந்து பார்க்கிறாரென்று கேட்டு விடாதீர்கள். அவர் மோந்து போட்டுவிட்டுப் போனபின் அதுவே குலிஸ்தானின் அத்தர் ரோஜாவைவிட அதிகமணம்வீசும்! "மதுரம், மதுரம்" பாடினாரே, அந்த இதய இனிமை இன் மணமும் கூட்டிவிடும். அந்த இனிய இதயத்தில் ப்ரின்ட் போட்டுத்தான் எடுக்காத போட்டோவையும், அச்சாகாத வரிகளையும் காட்டினார். இல்லாத சுவையை உணவில் ஊட்டினார்.

இதைச் சொல்கையில் இன்னொன்று நினைவில் வருகிறது. நாகமணி பூர்ணியா கூறியது. வெயில் வேளையில் அடியார்களோடு வெளியில் சென்று திரும்பிய ஸ்வாமி மற்றோரை முந்திக் கொண்டு முகாமுக்குள் விரைந்தாராம். தானே பழச்சாறு பிழிந்து வந்து கொடுத்துக் குழந்தைகளுக்குக் களையாற்ற வேண்டுமெனத் தாய் கொண்ட பரபரப்புத்தான்! பழச்சாறு ஜாடியைத் தம் கையிலேயே வைத்துக் கொண்டு ஒவ்வொரு வாயாக ஒவ்வோர் அடியார்க்கு வார்த்துக் கொண்டே போனாராம். முதல் மிடக்கைவிட அடுத்த மிடக்கு மேலும்இனிப்பு, அதற்கடுத்தமிடக்கு அதையும்விட இனிப்பு என்று கூடிக் கொண்டே போயிற் றாம்! 'மிட்டாய்ஸ்வாமி' கையிலிருந்த விசேஷம் என்பார் அம்மாதரசி.

இதய இனிமை இப்படியெல்லாம் அற்புதம் செய்தது போலப் பேச்சில் மட்டும் செய்யாதா என்ன? ஆம், பேசாத பாஷையைக் கேட்பிக்கவும் செய்யும்!

ஆஸ்த்ரேலியாவைச் சேர்ந்த ஜார்ஜ் இஸ்டெட் 1977—ல் ஒயிட்ஃபீல்ட் வந்திருந்தார். அடியார் கூட்டத்தில் ஒரு நாட்டுபுறக் கிழவனார். அய்....ய, பக்கத்தில் உட்காரவே அருவருக்குமாறு அழுக்கு. துயரம் அழுத்தும் முகத்தோடு அவர் ஸ்வாமி வரும் வழிமேல் விழி வைத்து உட்கார்ந்திருந்தார்.

பண முதலைகளுக்கும் படேபடேக்களுக்கும் பரிந்து உதவவே வந்த ப்ரத்யேகச் சாமியாராகச் சிலருக்குத் தோன்றுபவர் கூட்டத்திடை வந்தார். மேட்டு நீர் பள்ளத்துக்குப் பாய்வதே போல, அலங்கார அழகர் அலங்கோல அழுக்கரிடம் சிலுசிலுவெனச் சிற்றடி பெயர்த்துச்சென்றார். நிலைக்குத்திட்டு அமர்ந்திருந்த கிழவனாரிடம் குனிந்தார், ராஜாதி ராஜர். தெய்வ ஸந்நிதானங்களிலும் மண்டியிட்டறியாத தமது முழந்தாள் ஏறக்குறைய நிலத்தைத் தொடுமளவுக்குக் காலை வணக்கினார். வாடிச் சுருங்கிய வயோதிக முகத்தின் மட்டத்துக்குத் தமது இள வளம் தளதளக்கும் இன்முகத்தைத் தழைத்துக் கொண்டார். ப்ரேம கங்கை பொங்கி வந்தது. க்ராமத்தாரின் கழுத்தைக் கரத்தால் சுற்றியணைத்தார் ஸாயிராமன்.

குஹனை ஸ்ரீராமன் "தழுவினன் எடுத்து மார்பில் தம்பியைத் தழுவுமா போல்" என்பார் கம்பர். அவர் ஸாயி ராமாயணம் பாடினால் இங்கே 'தம்பியை' என்பதற்குப் பதில் 'தனது சேய்' எனப் போட்டிருப்பார்!

கிழவனாரை ஆற்றித் தட்டிக் கொடுத்தார் குழகனார். "இனிமேல் நீ கொஞ்சங்கூட கவலைப்படக் கூடாது. எல்லாம் ஸரியாகிவிடும்." என்றார். தொடர்ந்து துளிராய்த் துவளும் குரலில், "நான் முழுப் பொறுப்பும் எடுத்துக் கொண்டாகிவிட்டது. நீ வீட்டுக்குப் போ. பையன் நன்றாக குணமாயிருப்பதைப் பார்ப்பாய். (மூன்று விரல்களைத் தூக்கிக் காட்டி) மூன்று நாளில் பூர்ணமாகத் தேறிவிடுவான்" என்றார்.

ஸ்ரீராமன் குஹனிடம் கூறியது அப்படியே ஸாயிராமன் குரலில் குழைந்தது: "உன் கிளை எனதன்றோ? உறு துயர் உறல் ஆமோ?"

கண்ணீரில் வெடித்த கிழவருக்குக் கையசைப்பில் வந்த திருநீற்றை வழங்கி, மேலே நகர்ந்தார். அல்லது மிதந்தார். எத்தனை கனமான அநுபவத்தைத் தந்தாலும் இலவம் பஞ்சாகவே இருக்கும் அதிசய கனவான். அந்த மனசுதான் அவரை நித்ய லீலா பாலனாக வைத்திருப்பது!

ரா. கணபதி

* படேபடேக்களை அவர் இழுப்பதெல்லாம் இந்தப் பட்டிக்காடு பேதையருக்காகத்தான். இவர்களுக்காகக் கல்வி சாலைகள், மருத்துவ மனைகள், சிகித்ஸை முகாம்கள், பஜனைக் கூடங்கள், தேவாலயங்கள், எழுப்புவதற்குத்தான். நூற்றுக்கணக்கில் ஏழையருக்குத் திருமணம் நடத்தி, பாத்திரம் பண்டமும் வழங்குவதற்குத்தான். ஆயிரக்கணக்கான ஆதுலருக்கு ஆடையளிப்பதற்கும், பல்லாயிரக் கணக்கான பரதையருக்குப் பல்சுவை விருந்தளிப்பதற்குந்தான். மறந்துவிடாதீர்கள்! படேபடேக்களின் சாமியார்தான் இன்று வள்ளிசாக ஆறாயிரம் கிராமங்களை நாடெங்கும் தத்து எடுத்துக் கொண்டு அம்மக்களின் பொருளாதாரம், போக்குவரத்து, ஆரோக்யம், கல்வி, நன்னெறி, ஸமயஉணர்வு ஆகிய அனைத்தின் மேம்பாட்டுக்காகவும் ஆயிரம் தாயினும் அக்கறையுடன் பாடுபட்டு வருகிறார்.

ஆன்மியத்திலும், அருளிலும் பேருயர்வு பெற்ற வேறுபல தெய்வ புருஷர்களின் பெயரிலும் மக்கள் நலனுக்காக அரும் பணி பல

# தீராத விளையாட்டு ஸாயி

ஆற்றப்பட்டு வருகின்றன. இருப்பினும் அந்த நிறுவனங்களைச் சேர்ந்தோரே ஒப்புமாறு ஸாயி ஸ்தாபனமே மிகவும் பரவலாகவும் ஆழமாகவும் இப்பணி செய்யுமளவுக்கு அதற்குப் பொருள் பலமும் செல்வாக்கும் பெற்றவர்களின் பேராதரவு கிட்டியிருப்பது எதனால்? முதலில் படேபடேக்களை விசேஷமாக ஆகர்ஷிப்பதற்கும், பிற்பாடு அவர்களுடைய பொருளையும் செல்வாக்கையும் பிற்பட்ட மக்கள் நலனுக்காக ஆகர்ஷிப்பதற்கும் ஸ்வாமியிடம் மட்டும் சிறப்பாக என்ன இருக்கிறது?

தொண்டர் படையும் இங்கு லக்ஷக் கணக்கில் சேருமாறு கவர்ந்திழுப்பது ஏது?

இதெல்லாம் மட்டுமில்லை. அக்கிராம மக்களுக்கே எவரோ வெளியார் தங்களுக்கு நன்மை செய்கிறார்களென்ற உணர்வு மட்டுமின்றி, தொண்டர் நாயகனிடம் நேராக ஓர் ஒட்டுறவு ஏற்படுகிறதே — இது எதனால்?

இத்தனைக்கும் ஒரே விடை — அவரது அற்புத சக்திதான்.

அற்புதமான முறையில் நோயை குணம் செய்கிறார், வேறு சிக்கல்களைத் தீர்க்கிறாரென்பதாலேயே படேபடேயிலிருந்து பரதையர்வரை இப்படி ஏராளமானவர் கவரப்பட்டிருக்கிறார்கள். ஒரு கிராமத்தில் தண்ணீர்ப் பற்றுக்குறை. தவிக்கிறார்கள். தலையாரியின் கனவில் தோன்றுகிறார் தலைவர். ஓரிடம் குறிப்பிட்டுத் தோண்டச் சொல்கிறார். தோண்டினால் கற்கண்டாக நீர் பொங்கியடிக்கிறது. அம்மக்கள் நெஞ்சில் பக்தி ஊற்றெடுக்கிறது.

ஆக, ஆத்மிகத்தை அற்புதத்தால் அவர் ''சீப்'' ஆக்கவில்லை. ''சீப்''பாக உள்ளவர்களைக் கொஞ்சத்தில் கொஞ்சமேனும் ஆத்மிகத்தில் கொண்டு வரவே அற்புதத்தைப் பயன் செய்து கொள்கிறார். அன்பைவிட ஆத்மிகம் இல்லையாதலால் எப்படியோ ஒருவாறு மக்களைக் கவர்ந்து தெய்வத்திடம் அன்பு படச் செய்கிறார்.

விலகி நின்று பக்தி செய்யாமல் நெருங்கி அன்பு செய்தாலே இனிமை அதிகம். இப்படி நெருக்கம் ஏற்படவே அற்புதத்தின் பிரமிப்புக் கூசலுக்கு விளையாட்டு விநோதமெனும் பச்சைக் கண்ணாடி போட்டுவிடுகிறார். மக்களுக்கு இறைவன் அன்பிலே வசப்பட்டுவிட்டதாலேயே அவர்களை உய்விக்கக் குழந்தைக் கூத்தடிக்கிறானாம். ''பார்த்தீர்களா, என் குழந்தைகளுக்காக நான் என்ன செய்கிறேன் என்று'' எனஞானியருக்கே இதைத்தான் காட்டுகிறானாம் — பாகவத பௌராணியர் அப்படித்தான் 'சீப் மிரகிளை'ச் சொல்கிறார்!

எத்தனை வியத்தகு செயலிலும் விளையாட்டு அம்சம் போகாது நம் ஸ்வாமிக்கு!

நாட்டுப்புறக் கிழவருக்கு வியன் கருணை காட்டியபோதும் கையோடு கையாக ஒரு விளையாட்டைக் காட்டினார். கிழவரிடம் ஸ்வாமி பேசுவதைப் பக்கத்தில் அமர்ந்து கேட்ட ஜார்ஜ் இஸ்டெடுக்கு விசித்திரமாயிருந்தது. 'இந்தப் பாமரர் நிச்சயம் ஆங்கிலம் தெரியாதவராகத்தான் இருப்பார். இவரிடம் ஏன் ஸ்வாமி ஆங்கிலத்தில் பேசுகிறார் — அதிலும் தமது ஆஸ்திரேலிய மோஸ்தரில் பேசுகிறார்!' என்று அவருக்கு ஆச்சரயம். உள்ளத்தைச் சுண்டும் குரல் நன்றாகக் கேட்கிறதே! ''நௌ நௌ யு ஆர் நாட் டு ஓர்ரி..... யு ஆர் டு கோ ஹோம்.....'' என்கிறாரே!

ஸ்வாமி சென்றபின் பாமரரிடம் ஜார்ஜ் பேச்சுக் கொடுத்தார். அருள் வெள்ளம் முட்டிப் பரவசமாயிருந்த கிழவருக்கு இவர் கேட்பதொன்றும் அடியோடு புரியவில்லை.

உடனிருந்தாரை ஜார்ஜ் விசாரித்தார். அவர்கள், ''ஸ்வாமி எங்கே ஆங்கிலத்தில்

பேசினார்? கன்னடத்தில் அல்லவா பேசினார்?'' என்று கூறி சிரித்தனர்!

* அமெரிக்க கோஷ்டிப் பேட்டியொன்றில் ஸ்வாமி எட்ட அமர்ந்திருந்த ஓர் இளைஞரைப் பார்த்தார். ''யு ட்ரான்ஸ்லேட்'' என்று அவரிடம் கூறித் தெலுங்கில் பேசலானார். இளைஞர் கடகடவென மொழி பெயர்த்தார். உடன் வந்தோருக்கு வியப்பு. ''இந்தப் பிள்ளை எப்போது தெலுங்கு கற்றுக் கொண்டது'' என்று. இளைஞருக்கோ அவர்களை விடவும் வியப்பு. திருத்தமான அமெரிக்கன் இங்கிலிஷில் பேசும் பாபா ஏன் அதையே தம்மைக் கொண்டு அம்மொழியிலேயே பெயர்க்கச் சொல்கிறார்?' என்று!

பேட்டி முடிந்து வெளி வந்தபின் அவர்கள் பரஸ்பர வியப்பைச் சொல்லிக் கொண்டதில் தீராத திருவிளையாடலரின் குறும்பு வெளியாயிற்று. விலா வெடிக்கச் சிரித்தார்கள். இன்குரல் ஒலிக்கிறதா? ''எனக்கு என் குழந்தைகளை எப்படியாவது ஸந்தோஷப் படுத்த வேண்டும்.''

* சென்னையில் 1957 — ல் நடந்த அகில இந்திய ஸத்ய ஸாயி ஸேவா மாநாடு. ஸ்வாமி முதல் நாள் மாலை தாம் நிகழ்த்திய உரையின் சில விஷயங்களை மாநாட்டு ப்ரமுகர் சிலருக்குத் தெலுங்கில் விளக்கிக் கொண்டிருக்கிறார். காந்தீயத் தலைவர் பி. ராமக்ருஷ்ண ராவ். அங்கே இருந்த இந்துலால் ஷாவுக்குத் தெலுங்கு புரியாது என்பதை ஸ்வாமிக்கு நினைவூட்டி, ''நான் வேண்டுமானால் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கவா?'' எனக் கேட்டார்.

''வேண்டாம். அதற்குப் பொழுதில்லை. இந்துலாலுக்குத் தெலுங்கு தெரியும்'' என்று ஒரு போடுபோட்டுவிட்டு, இந்துலால் ஷாவின் தலையை மெல்ல ஒரு தட்டுத் தட்டினார் ஸ்வாமி.

அந்த விநாடியிலிருந்து ஸ்வாமி பேசிய தெலுங்கு தட்டப்பட்டவருக்கு மெய்யாலுமே புரிய ஆரம்பித்து விட்டது!

* ஐந்தாறு ஆண்டுகளுக்கு முன் நடந்த நிகழ்ச்சி. அடியோடு ஆங்கிலம் அறியாத மெக்ஸிகோ ஜனாதிபதி மனைவியும், படு ''உடைசலான'' ஆங்கிலமே சிறிது அறிந்த அந்நாட்டு அம்பாஸிடரும் ஸ்வாமியிடம் பேட்டி பெற்றனர். பேட்டி முடிந்து திரும்பி வரும்போது பூமி காலில் பாவாத பூரிப்புடன் காணப்பட்டனர். பிற்பாடு டாக்டர் பகவந்தம் ஸ்வாமியிடம், ''எந்த பாஷையில் பேசி 'மானேஜ்' செய்தீர்கள்?'' எனக் கேட்டார்.

''இதய பாஷை'' என்றார் இனியர்.

அவர், ''ப்யூர் லவ்'' வில் இனிப்பு தயாரிப்பதாக ஸி. டி. ஆரிடம் சொன்னதில் பலப்பல வகையறுக்கள் உண்டு!

மான்ட்ரீலைச் சேர்ந்த ஸமய ஒப்பியல் பேராசிரியரான ரோஸ்னர் பாதிரியார் ஆன்மப் பரிபக்குவம் பெற்ற ஒருவர். அவர் ஸ்வாமி, ''வரவழைக்கும்'' பொருட்கள் பற்றி மூன்றே வார்த்தையில் சொல்வார். ''அவரது இதயத்திலிருந்து உற்பத்தியானவை.''

நம் கண்ணுக்குத் தெரியாத ஒரு பன்மொழி பெயர்ப்புக் கம்ப்யூட்டர் — ஒலி பெருக்கியும் அது உற்பத்தி செய்துள்ளது போலும்!

(தொடரும்)

## எம். கே. ராதாவுக்கு மட்டுமல்ல...



* எம். கே. ராதா மறைந்த விஷயத்தை டி. வி. நியூஸில் தெரிவித்து, அவர் நடித்த 'சந்திரலேகா' படத்திலிருந்து ஒரு காட்சி என்றார்கள். ஆனால் தொடர்ந்து காட்டப்பட்டதோ 'அபூர்வ சகோதரர்கள்' படக்காட்சி!

* எம். கே. ராதாவுக்கு மட்டும்தான் 'சதிலீலாவதி' முதல் படம் என்று பலர் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். அது எம். ஜி. ஆர்., என். எஸ். கே., டி. கே. சண்முகம் ஆகியோருக்கும் கூட முதல் படமாம்!

— சௌம்யா.


விவரமறிந்தோர் நாடுவது
ஆஸ்ப்ரோ ஆறுதல்
இப்போது 2 வித வீரிய வகைகளில் வருகிறது.
ஆஸ்ப்ரோ , ஆஸ்ப்ரோ 600
சாதாரண தலைவலிக்கு
மண்டை பிளக்கும் கடுமையான தலைவலிக்கு
ASPRO
ASPRO 600
ஆஸ்ப்ரோ
எக்ஸ்ட்ரா ஸ்ட்ரெங்த்
ஆஸ்ப்ரோ 600
daCunha/AS/35/85TM



❝என் செல்லப்பேத்திக்கு என் பழங்கதைகளைக் கேட்பதில் அலாதி உற்சாகம்! எனக்கு 12 வயதிலேயே கல்யாண வைபோகம் நடந்த கதையைச் சொன்னால் அவளுக்கு கொள்ளமாட்டாத சிரிப்பு!

எனக்கு கல்யாணச் சீராகக் கிடைத்த் எவர்சில்வர் பாத்திரங்களைப் பற்றியும் ஆவலாகக் கேட்பாள். நாற்பது வருடங்களாக இன்றும் நான் சமைத்துவரும் பாத்திரங்களாயிற்றே!

இப்போதெல்லாம் அந்த மாதிரியான 'கிண்'ணென்ற பாத்திரங்கள் கிடைப்பதில்லை என்றே நினைத்திருந்தேன்—சேலம் எவர்சில்வர் பாத்திரங்களைப் பார்க்கும் வரை. எனக்கா தெரியாது, எது நல்ல பாத்திரம் என்று!

அந்த காலத்துப் பாத்திரங்களைப்போலவே உயர்தரமானவை. கரும்புள்ளிகளோ, கறையோ பிடிக்காது. வருடக்கணக்கில் உழைத்தாலும் பளபளப்பு போகாது.

நான் இனி பழங்கதை பேசினால் அதில் புது கதாபாத்திரங்களும் இருக்கும். அவைதான் சேலம் எவர்சில்வரில் செய்த பாத்திரங்கள்!❞

சேலம் எவர்சில்வரினல் தயாரிக்கப்பட்ட பாத்திரங்கள் எல்லா பிரபலமான பாத்திரக்கடைகளிலும் கிடைக்கும்.

**சேலம் எவர்சில்வர்.**
**நம்பிக்கைக்குப் பாத்திரமான பாத்திரங்கள்.**

சேலம் உருக்காலை

## பிராமணர் சங்கத்தினரின் அநாகரீகம்

# "வெட்டுவேன்! கொல்லுவேன்!.! நிறுத்துடா நாடகத்தை!"

கடந்த மாதம் 31—ம் தேதி மயிலை ஆர்: ஆர். சபாவில். 'வெங்கட்'டின் 'உயிரில் கலந்த உறவே' நாடகம் நடந்து கொண்டிருந்தபோது இடையே பிராமண சங்கத்தினர் எழுந்து கத்தி, கலாட்டா செய்து நாடகத்தையே நிறுத்திவிட்டனர்! நடந்தது என்ன? ஆர். ஆர். சபா அங்கத்தினர் ஒருவர் கூறுகிறார்:

**நா**டகம் நல்ல விறுவிறுப்புடன் நடந்து கொண்டிருந்தது. கூர்மையான வசனங்கள். இன்று பிராமண சமுதாயத்தில் என்ன விதமான போலித்தனங்கள் உண்டோ அவற்றை வசனங்களில் விண்டு வைத்துக் கொண்டிருக்கிறார் ஆசிரியர் வெங்கட். கிட்டத்தட்ட இடைவேளை விடும் சமயம். மேடையில் வெங்கட் (அவரே அதில் நடிக்கவும் செய்கிறார்) வசனம் பேசிக் கொண்டிருந்தார்:

''இன்றைக்கு முற்போக்குச் சமூகத்தைச் சேர்ந்த நாம்தான், 'எங்களைப் பிற்பட்டோர் பட்டியலில்சேருங்கள்' என்றுமனுக்கொடுத்துக் கொண்டிருக்கிறோம்!''

— இந்த வசனத்தை அவர் பேசி முடித்ததுதான் தாமதம், அரங்கத்தின் முன் வரிசையில் உட்கார்ந்திருந்த ஒருவர் எழுந்தார். அவர் பிராமணர் சங்கத்தின் தலைவர்.



• வெங்கட்

''ஸ்டாப் திஸ் ப்ளே மிஸ்டர் வெங்கட்'' என்று கத்தினார். கூடவே ஏராளமான பேர்கள் அவருடன் சேர்ந்து மேடையில் தாவினர். அப்புறம் அவர்கள் பேசியதைக் கேட்டால்..... 'இவர்கள் பிராமணர் குலத்தைச் சேர்ந்தவர்கள்தானா' என்று சந்தேகமே வந்துவிட்டது! 'வெங்கட் எழுதிய வசனமெல்லாம் போதாது; இன்னும் வன்மையாக எழுதியிருக்க வேண்டும்' என்று எண்ணுமளவுக்கு இவர்கள் நடந்து கொண்டனர், பேசினர்.

மேடையில் வெங்கட் மட்டுமே. அவருக்கு எதிரே பிராமணர் சங்கத் தலைவர்; அவருடைய சிஷ்யர்கள்.

''ஏண்டா, நீயும் ஒரு பிராமணனா? இந்த மாதிரியெல்லாம் இனிமேல் எவனாவது நாடகம் எழுதினால் தலை எகிறிடும்!''

''வெளியே வாடா!''

''நாங்க தண்ணி அடிப்போம், மட்டன் சாப்பிடுவோம். நீ யார்டா அதை மேடையில் சொல்றது?''

''உன் உயிரை ஜாக்கிரதையாகப் பாத்துக்கோ!''

— இப்படி பல்வேறு மிரட்டல்கள். அச்சிடமுடியாத-ஆபாச, அசிங்க வார்த்தைகள்!

வெங்கட்டைப் பாராட்ட வேண்டும். விவேகத்தைக் கையாண்டார். ஒரு வார்த்தை பதில் பேசியிருந்தால் அவருக்குத் தர்ம அடி விழுந்திருக்கும்.

''ஆர். ஆர். சபா நாடகம் போட்டிருக்கு. அதை நடுவிலேயே நிறுத்த வேண்டுமாம்! இவர்கள் யார் அதைச் சொல்வதற்கு?'' என்று மெம்பர்கள் முணுமுணுத்துக் கொண்டிருந்தனர்.

கடைசியில் பிராமணர் சங்கத் தலைவரே

மைக்கில், "டிராமா நிறுத்தப்பட்டது" என்று அறிவித்தார்!

மெம்பர்கள்- பலருக்கு எரிச்சல். பிராமணர்களைத் தாக்கும் விதத்தில் (நானும் ஒரு பிராமணன்தான்) ஏதாவது வசனமோ, காட்சியோ இருந்தால்—எதிர்ப்பை—வெளிப்படுத்தப் பல வழிகள் இருக்கின்றன. அரசாங்கத்தில் (போலீஸில்) முறையிடலாம். அமைதியான முறையில் மறியல் நடத்தலாம். வெங்கட்டையே அழைத்துப் பேசி விளக்கியிருக்கலாம். அதையெல்லாம் விட்டுவிட்டு நாடகத்தின் நடுவில் எழுந்து கத்தி, கலாட்டா செய்து அதை நிறுத்தியதுதான் பிராமணர் சங்கத்துக்குத் தெரிந்த நாகரீகமா?

## வெங்கட்டைச் சந்தித்தபோது:

"நெடு நாட்களாகவே என் மனத்தை உறுத்திக் கொண்டிருந்த விஷயம்தான் இந்தக் கதை. இன்று நடுத்தர வகுப்பிலுள்ள பல பிராமணர்கள் மட்டன் சாப்பிடுகிறார்கள், தண்ணி அடிக்கிறார்கள், வரதட்சணை வாங்குகிறார்கள். இந்த விஷயங்களைச் சமூகத்தில் பலர் வெளிப்படையாகப் பேசுகிறார்கள். நான் நாடகத்தில் புகுத்தியிருக்கிறேன். காஞ்சிப் பெரியவாள், 'பட்டுப் புழுவைக் கொன்று எடுக்கப்படும் பட்டு நூலில் நெய்யப்படும் புடவையை அணியக் கூடாது' என்றார்கள். பிராமணப் பெண்மணிகள் உடுத்தாமல் இருக்கிறார்களா? பூணூலை எடுத்து ஆணியில் மாட்டி வைத்துள்ள பிராமணர்கள் இல்லையா? என் நோக்கமெல்லாம் 'இப்படியெல்லாம் இருக்காதீர்கள், திருந்துங்கள்' என்று கூறுவதுதான். ஆனால் அன்று நடந்த கலாட்டாவைப் பார்த்தபின் இவர்களைத் திருத்தவே முடியாதோ என்று சந்தேகம் எழுந்திருக்கிறது!

"சில வசனங்களை நீக்கிவிட்டு உன் நாடகத்தை நடத்து' என்று இப்போது சமரசத்திற்கு வந்திருக்கிறார்கள். எழுத்தாளன் சுதந்திரத்தைப் பறிக்க இவர்கள் யார்? எந்தவித வசன வெட்டும் இல்லாமல் மறுபடியும் நாடகம் நடக்கப்போகிறது. நானோ என் குழுவோ இவர்கள் மிரட்டலுக்குப் பயப்படப் போவதில்லை."

கடந்த பத்து வருடங்களுக்கு மேல் நாடக உலகில் இருந்து வரும் வெங்கட் அன்று நடந்தது போன்ற ஒரு நிலைமையை இதுவரை சந்தித்ததே இல்லையாம். தாம்பத்யம் ஒரு சங்கீதம், நிச்சயம், சூரப்புலி, அந்த சில நிமிடம் போன்ற சினிமாக்களையும் இயக்கியிருக்கிறார் வெங்கட்.

திட்டமிட்டுக் கூட்டமாகச் சென்று நாடகத்தை நிறுத்திய பிறகு, "ஏதோ, உணர்ச்சிவசப்பட்டு நடந்து கொண்டுவிட்டோம். நடந்ததை மறந்துவிடுங்கள்" என்று மறுநாள் பிராமணர் சங்கத் தலைவர் போய் வெங்கட்டிடம் மன்னிப்புக் கோராத குறையாகப் பேசியிருக்கிறார். அந்த அளவுக்கு அவர் பெருந்தன்மையைப் பாராட்ட வேண்டியதுதான்!

— நமது நிருபர்



கலைவாணர் பாராட்டிய இசை!

நாதஸ்வரக் கலைஞர் ஒருமுறை கலைவாணரிடம் வந்து, எனது நாதஸ்வர வாசிப்பைக் கேட்டு ஐந்து ரூபாய் கொடுங்கள் என்றார். கலைவாணரும் வாசிக்கச்சொன்னார். நாதஸ்வரக்காரர், வாசிக்கலானார். வாசிப்பில் சுருதியோ, ராகமோ, தாளமோ ஏதும் இல்லை. அவர் தம் மனம் போனபடி வாசித்து முடித்தார். இறுதியில் கலைவாணர் அவருக்கு நூறு ரூபாயைக் கொடுத்து, உனது வாசிப்பை நன்றாக ரசித்தேன். ஆனால் நீ வாசித்தது நாதஸ்வரம் இல்லை. உனது வறுமையின் துயரத்தைத்தான் நாதஸ்வரக் குழலில் பொழிந்து தள்ளிவிட்டாய். மறுமுறை இங்கே வரும் போதாவது நன்றாக கற்றுக் கொண்டு வா என்று சொல்லியனுப்பிவிட்டார்.

— ஜா. ரவி.




போபால்விஷவாயுவிபத்தால்பாதிக்கப்பட்ட தன் 'இமேஜை'க் காப்பாற்றிக் கொள்வதற்காக அமெரிக்காவில் உள்ள யூனியன் கார்பைட் நிறுவனம், **Kiss a Carbider Today', 'Iam a Loveable Carbider'**, எனஅச்சிடப்பட்ட 'டி' சர்ட்களை வினியோகம் செய்து வருகிறது. வேலைக்கு ஆபத்து வந்து விடுமோ என்ற அச்சத்தில் அந் நிறுவனத் தொழிலாளர்கள் இந்த 'டி' சர்ட்களை அணிந்து வருகின்றனர்.

— சீதா பஞ்சு.

(சண்டே இதழிலிருந்து)

# சித்தரஞ்சனி

## 7 குல வைரி

ஸஹ்யாத்ரி மலைத்தொடரின் தாபோல் பகுதி செங்குத்தாக எழுந்து மிகப் பயங்கரமாகக் காட்சியளித்தாலும், அடர்த்தியான மலைக்காடு வெண்மதியைக் கூடியவரை உட்புகாது தடுத்தாலும், இருளைக் கிழிக்கும் மின்னல்போல் வெள்ளை உடையில் சித்தரஞ்சனி காட்டின் ஊடே மிக வேகமாக வந்தாள். அத்தனை இருளிலும் அவள் பூவுடலைத் தழுவ ஆசை கொண்ட சந்திரன் தனது கதிர்களை அவள் மீது வீச முயன்று முடியாது போகவே, கதிர்களை மரங்களின் இலை இடுக்குகளின் வழியாக அவள் மீது செலுத்தி அவள் வெண்ணிறச் சேலையை வட்டம் வட்டமான வெள்ளிக் காசுகளால் இழைத்து அழகு பார்த்தான். அந்தச் சமயத்தில் சந்திரன் தனது குருபத்தினியான தாரையை நினைத்து, அவளைப் போலவே சித்தரஞ்சனியையும் ஆடையற்றவளாகப் பார்க்க வேண்டுமென்றுதுர் எண்ணம்கொண்டதனால் அவன் துஷ்டக் கண்களைச் சிறுமேகமொன்று அவன் முகத்தில் படர்ந்து மூடியது. ஆனால் அந்தத் துஷ்டன் கண்கள் அந்தச் சிறு மேகத்தைக் கலைத்து எட்டிப் பார்க்கவே சண்டிகா தேவி குகைப் பகுதியில் வெளிச்சம் ஓரளவு தெரியவே செய்ததால், சித்தரஞ்சனி பாறை மீதிருந்த புஷ்பக் குவியலைப் பார்க்க முடிந்தது. அந்த புஷ்பக் குவியலைக் கண்ட சித்தரஞ்சனியின் முகத்தில் சிறிது குழப்பம் தெரிந்தாலும் "இருக்காது இருக்காது. நேற்று நான் குவித்த புஷ்பங்கள் இத்தனை நேரம் வாடாதிருக்க முடியாது" என்று தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டாள். அதன் விளைவாகப் பாறை மீது குனிந்து புஷ்பக் குவியலை கலைத்து, அது மறைத்திருந்த செய்தியையும் உற்று நோக்கினாள். பிறகு மிக மெதுவாக நகைத்தாள், புஷ்பங்களில் இரண்டொன்றை எடுத்துத் தலைக்குழலில் சொருகிக் கொண்டாள். மீதியிருந்த புஷ்பங்களை அள்ளியெடுத்து மார்பிலும் அணைத்துக் கொண்டாள். அவள் செய்கைகளையெல்லாம் புதரின் மறைவிலிருந்து பார்த்த பூஜாரி "இன்று மோகினி இந்த முரடனைக் கண்டிப்பாய்ப்பிடித்துக்கொள்ளும்" என்று உள்ளூற சொல்லிக் கொண்டான். அப்படி நினைக்கவில்லை கௌதமிபுத்ரன். "அணைத்த புஷ்பங்களின் இதயப் பிராந்திய மேடுகளில் தனது தலையிருந்தால், எப்படியிருக்கும்?" என்று நினைத்துப் பெருமூச்சுவிட்டான்.

அந்த நினைப்புக்குச் சுருதி கூட்டுவது போல் சித்தரஞ்சனி தனது வீணைக் குரலில் பாடத் துவங்கினாள். முந்திய நாட்கள் போல் கீழ்ஷட்ஜத்திலிருந்து எழுந்து நிஷாதத்துக்குச் செல்லும் முறையை அவள் கடைப்பிடிக்கவில்லை. ஒரே ரீதியில் ஸாமகானம்போல் துல்யமாகச் சவுக்க காலத்தில் எழுப்பப்பட்ட அந்த கீதம் அன்று எழும்பவில்லை, அவள் முந்திய இரு இரவுகளைப் போல் நின்ற இடத்தில் செங்குத்தாக நின்று பாடிக் கொண்டே பூமிக்குள் மறையவும் இல்லை. அன்றைய கீதம் ஸ்வரங்களை முன்னும் பின்னுமாக அமைத்து ஏதோ காமகீதம்போல் சலசலப்புடன் ஜலதரங்கம் போல் ஒலித்தது. தாள ஜதி துரிதப்பட்டு வர்ண மெட்டும் முற்றும் மாறி, துன்பம் தோன்றும் பிசாசகீதமாக இல்லாமல் காமத்தைக் கிளறும் இன்ப கீதமாக அமைந்தது. வர்ண மெட்டு ஊஞ்சலாடியது, அவளையும் இருபுறங்களிலும் ஆட்டியது. அவள் மோகன உருவம் அப்புறமும் இப்புறமும் அசைந்தது. கால்கள் மாற்றி மாற்றி வைக்கப்பட்டன. கீழே குத்தும் பாறையின் மணிக்கற்கள் அவள் பாதத்தைக் குத்துவதையும் அவள் லட்சியம் செய்யாமல் நிருத்தம் செய்தாள். கடைசியாக அப்புறமும் இப்புறமும் பார்த்தாள். யாரும் கண்ணுக்குப் புலப்படாமல் போகவே பாட்டை நிறுத்திப் பெருமூச்சுவிட்டாள். பிறகு கீழே உட்கார்ந்து ஏதோ ஒரு சிறு குத்துக்கல்லைக் காலால் உதைக்கப் பெரிய பாறை அகன்றது. அது கொடுத்த இடத்தில் அவள் மெதுவாக இறங்கினாள் பூமிக்குள். பாறை நீங்கிய இடத்தில் அடி மட்டும் இருளே தெரிந்தாலும் ஆரம்பப்படிகள் கண்ணுக்கு நன்றாகவே தெரிந்தன. சித்தரஞ்சனி கண்ணுக்கு மறைந்த பிறகு அந்தப் படிகளில் கௌதமிபுத்ரனும் இறங்கினான். அவனுடன் அதுவரை புதரில் பதுங்கியிருந்த பூஜாரி ஓடி வந்து அந்த வாலிபனைத் தடுக்கமுயன்றும்முடியவில்லை. அவன் இரண்டடி குகையை நோக்கி எடுத்து வைப்பதற்குள் குகைவாய் மூடிக் கொண்டது. மேலே இருந்த பெரிய பாறை ஏதோ விசையால் ஏவப்பட்டதுபோல் மெதுவாக நகர்ந்து பழையபடி குகையை சுவடு தெரியாமல் அடைத்துவிட்டது. என்ன செய்வது என்று தெரியாத பூஜாரி மனிதயத்தனம் பயன்படாத

சாண்டில்யன்

போது சாதாரண மனிதர்கள் செய்யும் அலு வலில் இறங்கினான்; அதாவது தாபிலேசு வரனர மனத்தில் தியானித்தான். சண்டிகா தேவியையும்வே ''டிக்கொண்டான்'' தாயே இந்த வாலிபன் . ர் பெற்ற பிள்ளையோ, அவனைக் காப்பாற்றிவிடு. அவன் அசட்டுத் துணிவை மன்னித்துவிடு'' என்று.

குகைக்குள் இறங்கிய கௌதமிபுத்ர சதகர்ணியின் நிலைமை பூஜாரியின் நிலைமைக்கு முற்றும் மாறாயிருந்தது. பாறை மூடியதுமே காரிருள் சூழ்ந்துவிட்டதால் பக்கப் பாறைகளைப் பிடித்துக் கொண்டும் தடவிக் கொண்டும் படிகளில் மிக எச்சரிக்கையுடன் இறங்கலானான். இருபுறத்திலும் இருந்த சுவரில் பாறையில் கடினம் இருந்தாலும் ஓரளவு நேராகவே இருந்தது. படிகளும் ஒரு படியைப் போலவே அகலமும் உயர்வும் உள்ளதாக அமைந்திருந்ததால் இறங்குவது சுலபமாயிருந்த போதிலும் கௌதமிபுத்ரன் எச்சரிக்கையாகவே இறங்கலானான். அவன் நாலு படிகள் இறங்கியதும் செண்பக மலரின் சுகந்தமொன்று கிளம்பி அவனை மயக்கவே, அந்த வாசனையைச் சிறிது நேரம் முகர்ந்த கௌதமிபுத்ரன் மூன்றாவது படியிலேயே சிறிது நேரம் நின்றதும் இன்னொருவித பூ வாசனை கீழேயிருந்து மிதந்து வந்தது. அப்படி மாறி வந்த வாசனைக்குக் காரணத்தை அறியவும் தனக்கு முன்பு இறங்கிச் சென்ற சித்தரஞ்சனியைச் சந்திக்கவும் மெள்ள படிகளில் இறங்க முற்பட்டான். பத்து படிகள் தான் இறங்கியிருப்பான். அவன் இறங்குவது சிறிது தடைப்பட்டது, எதிரே கையில் பட்ட இரு தூண்களால். தூண்களை அசைக்க முயன்ற அந்த வாலிபன் அவை நகராததால் என்ன செய்வது என்று சிந்தித்த சமயத்தில் இரண்டு மெல்லிய கைகள் அவன் வலது கையைப் பிடித்தன. அவை முன்பு தன் கழுத்தை முறிக்க முயன்ற கைகளே என்பதை அவற்றின் பரிமாணத்தாலும் விரல்களின் மென்மை கலந்த வன்மையாலும் புரிந்து கொண்ட கௌதமிபுத்ரன் அந்தக் கைகளைத் தனது இன்னொரு கையாலும் பற்றி இழுக்க ஆரம்பித்ததும், பூவுடலொன்று அவன் உடலுடன் உராய்ந்தது. அவன் காதுக் கருகில் தவழ்ந்த இரு அதரங்கள் ''கௌதமிபுத்ரா! பெரும் ஆபத்திலிருக்கிறாய். எந்த நிமிடத்திலும் நீ சிறைப்படலாம். நீ இங்கிருந்து போய்விடுவது நல்லது'' என்று கூறியபோது அந்த உதடுகள் காதில் அவ்வப்பொழுது பட்டதால் ''இந்த இந்திர போகத்தை விட்டு நான் ஏன் ஓட வேண்டும்?'' என்று உள்ளூர எண்ணினான். எண்ணியதோடு நிற்கவில்லை அவன். தான் என்ன செய்கிறோமென்பதை அறியாமலே இருட்டில் நின்ற சித்தரஞ்சனியின் உடலைத் தனது கைகளால் சுற்றினான். ஆனால் அவன் பிடியில் அவள் அகப்படாமல் வெகு லாகவமாகக் கழன்று கொண்டாள். அடுத்து அவள் படிகளில் இறங்கி வேகமாக ஓடும் காலடி ஓசை மட்டும் கேட்டதால் தானும் வேகமாக இறங்க முற்பட்டான் சாதவாகனன். சுமார் பதினைந்து படிகள் இறங்கியதும் திடீரென ஒரு விளக்கு பாதாளத்தில் ஏற்றப்பட்டது. அந்த விளக்கில் சண்டிகாதேவியின் அருளும் பயங்கரமும் இணைந்த முகம் பளீரெனத் தெரிந்தது. கருங்கல்லில் வடிக்கப்பட்ட சிலையாயினும் தேவிக்குக் கண் மலர்களும் நகைகளும் அணிவிக்கப்பட்டிருந்ததால் அவள் கண்கள் நேராக உற்றுப் பார்ப்பது போன்ற பிரமையை அளித்தன. அவள் கையில் காணப்பட்ட சூலம் எதிரிகளை சம்ஹரிப்பதற்குச் சித்தமாயிருப்பதுபோல் குகைப்படிகளை நோக்கிக் கொண்டிருந்தது.

விளக்கில் ஜொலித்த சண்டிகாதேவிக்கு முன்பாகச் சித்தரஞ்சனி மண்டியிட்டுத் தலை



வணங்கி உட்கார்ந்திருந்தான். அவள் உதடுகள் பழைய சித்தரஞ்சனி ராகத்திலேயே உச்சாடனம் செய்யப்பட்டாலும் இம்முறை அந்தக் கானத்தில் குகையின் மேற்பகுதியிலிருந்த குதூகலமில்லை. பயபக்தியும் துன்பமும் நிறைந்த வர்ணமெட்டில் அவள் மந்திரங்களைக் கீதம்போல் இசைத்தாள். அந்தக் கீதத்தைக் குகைப் பாறைகள் நாலா பக்கங்களிலுமிருந்து எதிரொலி கிளப்பியதால் ஏதோ நாத வெள்ளம் அங்கு பிரவகிப்பது போன்ற பிரமை ஏற்பட்டது சாதவாகன வாலிபனுக்கு. எங்கும் நிறைந்த அந்த நாதப் பிரம்மத்துக்கு அடிமையாகச் சித்தரஞ்சனியின் பக்கத்திலேயே உட்கார்ந்து தரையில் சிரசை வைத்து வணங்கினான் அந்த வாலிபன். பல நிமிஷங்கள் கழித்து அவன் தலை தூக்கிய போதும் சித்தரஞ்சனி எழுந்திருக்காமல் தரையில் தலைமுட்டிய நிலையிலேயே கிடந்தாள்.

மெல்ல அவள் மீது கையை வைத்தான் கௌதமிபுத்ரன். அவன் கைபட்டது அவளுக்குத் தெரியவில்லை. சுரணை சிறிதும் வராத நிலையில் கிடந்தாள் அந்த அழகி. கவிழ்ந்த நிலையிலும் அவள் பூவுடல் எத்தனை அழகாயிருந்தது என்பதைக் கண்ட அந்த வாலிபன் வளைந்த அந்த உயிர்ச் சிலையைக் கவனிக்கலானான். அவள் வளைந்து கிடந்ததால் அவள் மார்பகம் சிறிதும் தாழாமல் கெட்டிப்பட்டு ஒரே நிலையில் நின்றதையும், இடை வளைந்ததால் அவள் பின்னழகு அதிகமாக எழுந்து கிடந்ததையும் எண்ணிய கௌதமிபுத்ரன், "சே! இந்த எண்ணங்கள் சந்நிதியில் வரலாமா? அப்சாரம்! என் சித்தமென்ன இப்படிக் குலைந்துவிட்டது?" என்று தன்னைத் தானே கண்டித்துக் கொண்டு தனது மனத்தைத் தூய்மைப்படுத்திக் கொள்ள மகா சண்டியை நோக்கினான். சண்டிகா தேவி தன்னை எரித்துவிடுவது போல் பார்ப்பதாகத் தோன்றியதால் தனது கண்களை அம்பாளின் திருவடிகளில் செலுத்தினான். சகல பாவங்களையும் தீயினில் தூசு போல் பஸ்மீகரப்படுத்திவிடும் அந்த அருட்பாதங்கள் அந்த வாலிபனின் இதயத்தைத் தூய்மைப்படுத்தவே செய்தன. தன்னை இன்னும் தூய்மைப்படுத்திக் கொள்ள அம்பாள் திருவடிகளைத் தொட எண்ணித் தேவியின் சிலையருகே சென்றான். அந்தச் சமயத்தில் ஒலித்தது சித்தரஞ்சனியின் குரல், "சண்டியை நெருங்க வேண்டாம்" என்று.

திரும்பிப் பார்த்த சதகர்ணி, சித்தரஞ்சனி வணங்கிய நிலையிலிருந்து எழுந்துவிட்டதையும், அவள் கண்களில் கோபப் பொறிகள் வீசுவதையும் கண்டான். "சித்தரஞ்சனி!" என்று மெதுவாக அழைக்கவும் செய்தான்.

அவள் அவனை ஏறெடுத்து நோக்கினாள். "உன்னை யார் இங்கு வரச் சொன்னது? குகையைத் திறக்கும் சூட்சுமம் உனக்கு எப்படித் தெரிந்தது?" என்று சினம் பெரிதும் துளிர்த்த குரலில் வினாக்களைத் தொடுத்தாள்.

இந்தத்திடீர் மாற்றத்துக்குள்ளன காரணம் என்று அவன் வியந்து கொண்டிருந்த போதே அவன் தோள் மீது இரும்புக் கையொன்று விழுந்து அவனை வேகமாகத் திருப்பியது. தன்னைத் திருப்பியவன் முந்திய இரவில் சித்தரஞ்சனியை அறைந்தவன் என்பதை உணர்ந்து கொண்ட கௌதமிபுத்ரன் "எடு உன் கையை. தெய்வ சந்நிதானத்தில் பூசலுக்கு இடமில்லை" என்று சொன்னான்.

"பெண்ணைக் கெடுக்கத்தான் இது இடம் போலிருக்கிறது?" என்று சினத்துடனும் ஏளனத்துடனும் பேசியதன்றி அந்த ராட்சதன், "உன் உயிர் இத்துடன் முடிந்தது. சண்டியைப் பிரார்த்தித்துக் கொள், நல்ல கதிக்காவது போகலாம்" என்றும் கூறி இடையிலிருந்த குறுவாளை வலது கையில் எடுத்துக் கொண்டு ஓங்கினான் கௌதமிபுத்ரனை அங்கேயே வெட்டிப் போட. "சண்டிகாதேவி! இந்த நரபலியை வாங்கிக்கொள்" என்று இரைந்தும் கூவினான். ஆனால் தேவி அன்று பலியை விரும்பவில்லை. அந்த ராட்சதன் வலது கை திடீரென்று நடுங்கத் தொடங்கிவிட்டது. கையிலிருந்த குறுவாள் தரையில் விழுந்து விபரீத ஒலிகளைக் குகையெங்கும் கிளப்பியது. ஆனால் அந்த இரவின் கதை அத்துடன் முடியவில்லை. அந்த ராட்சதனுக்குப் பின்னால் இன்னொருவன் குகைக்குள் இறங்கி வந்து கொண்டிருந்தான். அந்த மனிதன் பாரத சரித்திரத்தின் ஒரு முக்கிய பகுதியைத் திருப்பியவன் என்பதையும் சாதவாகனர்களின் குல வைரி என்பதையும் கௌதமிபுத்ரன் புரிந்து கொண்டான்.

(தொடரும்).



# ...திச் செலவு
# ...ாபோது
# ...ன் விலை
# ...டி?



நீங்கள் கொடுக்கும் பணத்திற்கு மிக மதிப்பு.

**சு**தந்திரமான பத்திரிக்கைகளை பராமரிப்பதற்கு எப்போதுமில்லாத அளவுக்கு செலவு அதிகமாகிவிட்டது. சம்பளச் செலவு, எந்திரம் மற்றும் கருவிகள், ஸர்விஸ் மற்றும் பழுது பார்த்தல், போக்குவரத்துச் செலவு, செய்தி சேகரித்தல் மற்றும் அது சம்பந்தமாக உலக முழுவதும் அலுவலகங்களைப் பராமரித்தல், இவற்றைக் கணக்கிட்டுப் பாருங்கள். நீங்கள் விரும்பும் நாளேட்டின் ஒவ்வொரு பிரதியின் உற்பத்திச் செலவும், அதற்கு நீங்கள் கொடுக்கும் பணத்தைவிட அதிகமாகும் என்பதை நீங்கள் அறிந்துகொள்ள முடியும். அச் செலவிற்கேற்ப, அது விலையிடப் பட்டால், அது, நாட்டின் பெரும்பாலான கல்வி அறிவு பெற்ற மக்களால் வாங்க முடியாமல் போய்விடும்.

**சு**தந்திரமான பத்திரிக்கைகளை உறுதிப்படுத்துவதில், விளம்பரத்திற்கு ஒரு பங்கு உண்டு; அதாவது செய்திகள் கருத்துக்களை வெளியிடுவது மட்டுமல்ல, அதற்கும் மேலாக இருக்க வேண்டும். பத்திரிகையின் உண்மையான சுதந்திரம் என்பது, அதை ஏராளமான மக்கள் வாங்கக் கூடிய விலையில் கிடைக்கச் செய்வதாகும். என்றால், அடுத்தவர் படிப்பதற்கு விளம்பர தாரர்கள் பணம் செலவழிக்க வேண்டும் என்பது அர்த்தமா? இல்லை. விளம்பரதாரர், அதிகமான வாசகர்கள் தூரமான இடங்களிலும் உள்ள வாசகர்கள், படிப்பதற்காக கட்டணம் செலுத்துகிறார் ...காரணம் வளர்ந்துவரும் விரிவான விற்பனையை அடைய விரும்புகிறார். டைம்ஸ் ஆ∴ப் இந்தியா குருப்பில் விளம்பரப்படுத்தும் போது, விளம்பரம் அத்தகைய வாசகர்களை அடைகிறது.

**மக்கள் தொடர்பு திட்டம் எதற்கும் டைம்ஸ் ஆ∴ப் இந்தியா முதுகெலும்பாக இருப்பதற்கு அதன் விரிவான வாசகர்கள் ஒரு காரணமாகும்.**

# டைம்ஸ் ஆ∴ப் இந்தியா குருப் வெளியீடுகள்



# வசந்தத்தின்

இருட்டை விரட்டிய சூரியன் பூமிக்கு 'குட்மார்னிங்' சொல்லி வெகு நேரமாகியும் தியாகராஜனுக்கு விழிப்பு வந்திருக்கவில்லை. 'கட்டினவள்' என்றொருத்தி இருந்தால் இவ்வளவு நேரம் தூங்க விட்டிருக்க மாட்டாள். கட்டைப் பிரம்மச்சர்யம் நிம்மதியான உறக்கத்துக்குக் கட்டியம் கூறத்தானே?

அநேகமாய் இரவு இரண்டு மணிக்கு மேல் தான் உறக்கம் வந்திருக்க வேண்டும். கண்கள் தீயாய் எரிந்தன. ஒவ்வோர் இரவும் போல் நேற்றிரவும் அவர் நெடுநேரம் நிலவோடு பேசிக் கொண்டிருந்ததால் நல்ல அசதி. உடல் வருத்தியது.

"இவ்வளவு நேரமா தூங்கறது?" — அசரீரியாய்க் கல்யாணியின் அதட்டல். நரை — தலையில் கொடிமூத்திருந்தாலும் திரை விழாத மனத்தில் அவர் வேறொருவன் மனைவியாகி விட்ட கல்யாணியோடு இன்னும் மாயையாய்க் குடும்பம் நடத்திக் கொண்டுதான் இருந்தார்.

"இதோ எழுந்திட்டேன்!" என்று கட்டிலைவிட்டு எழுந்தவர் சுருட்டு ஒன்றுக்குக் கொள்ளிவிட்டுப் புகையை ஆழ இழுத்தார். நுரையீரல் அறைகளில் தற்காலிகமாய்க் குடியேறிய புகை மனத்துக்கு இதமாய் இருந்தது. மெல்ல நடந்து மாடி விளிம்பிலிருந்த கட்



# மறு பிறவி...

டைச் சுவரில் கை ஊன்றிக் கொல்லைப் புறத்தில் குதூகலித்து ஓடிய காவிரியை வெறித்தார்.

இவர் இழுத்துவிட்ட புகை வளையங்கள் இவரது நினைவுகளை இளமைக்கு இழுத்திடத் திடீரென்று ஆற்றோரத்துப் படிக்கட்டுகளில் கல்யாணி தோற்றம் கொடுத்தாள். சோளத் தட்டை போன்ற கெண்டைக் கால்கள் தெரியும்படி பாவாடையைத் தூக்கிக் கட்டிக் கொண்டு குத்துக்காலிட்டு அமர்ந்தபடி பாத்திரங்களைத் தேய்த்துக் கொண்டிருந்தாள். வாய் ஏதோ சினிமாப் பாட்டை முணுமுணுத்துக் கொண்டிருந்தது.

'ஒரு முறையாவது அவளாகத் திரும்பிப் பார்க்க மாட்டாளா!' என்றிவன் அவளையே உறுத்துப் பார்த்தபடிக் காத்திருக்கிறான். நேரம் வீணாகக் கரைந்ததே ஒழிய கருமமே கண்ணாயிருந்த கல்யாணி கண்களை அலைய விடவே இல்லை!

'இப்படிச் செய்தால் என்ன?' — இவனுக்குள் ஒரு யோசனை. தேடிப்பிடித்து மாடி மூலையில் கிடந்த சின்னஞ்சிறு கல் ஒன்றை எடுத்துக் கொண்டு கட்டைச் சுவர் விளிம்புக்கு வருகிறான். இன்னும் கல்யாணி குனிந்தபடியே பாத்திரம் தேய்த்துக் கொண்டிருக்கிறாள். இவன் அவளது கழுத்துக்கும் — தோளில் சரிந்து இறங்கியிருந்த ரவிக்கைக்கும் இடையே தெரிந்த 'அரைநிலாப்' பரப்பைக் குறிவைத்துக் கல்லை வீசுகிறான்.

அந்தக் கல் காவிரிக்குள் மூழ்கி 'ப்ளக்' என்றது. கல்யாணி அங்கில்லை வெறும் பிரமை!

இதைப் போன்ற எத்தனையோ கற்களைக் காவிரி மகள் விழுங்கி ஏப்பம் விட்டிருக்கிறாள். கல்யாணிதான் இவரது ஆத்மார்த்தக் காதலைப் புரிந்து கொள்ளத் தவறிப் போனாள்.

''எஜமான், குளிக்க வெந்நீர் தயாராயிருக்கு!'' என்று கீழிருந்து வந்த வேலைக்காரி கனகத்தின் குரல் இவர் செவிப்பறைகளை எட்டியதாய்த் தெரியவில்லை.

* * * * *

'இந்த மார்க்குக்கு வேலை கிடைக்காமலா போய்விடும்?' என்றுதான் முதல் வகுப்போடு பி. எஸ்ஸி பட்டம் பெற்ற நாளில் தியாகராஜன் நினைத்தான்.

'அப்ளிகேஷன்' எழுதி எழுதியே எடை, உயரம், தேர்வு மதிப்பெண்கள் அவனுக்கு அத்துப்படியாயின. நுழைவுத்தேர்வுகள் எண்ணிறைந்தன எழுதியே பல நாட்டின் நாணயங்கள், தலைநகர்கள் அவனுக்குமனப்பாடம் ஆகிவிட்டிருந்தன என்றாலும் வேலைதான் அவனை விடாப்பிடியாய்த் துரத்தியடித்தது.

மனத்துக்கு ரம்மியச் சுகமாக அழகுப் பதுமையாய் அக்ரஹாரத்திலிருந்த பட்டு மாமியின் மகள் கல்யாணி வந்து சேர்ந்தாள். அவளின் தரிசனத்தில் இவன் கவலைகள் அந்நியமாகிப் போனது உண்மை.

சென்னை அத்திம்பேர் வீட்டில் தங்கி 'ப்ளஸ் டூ' வரை படித்த கல்யாணியைப் படித்தது

**பட்டுக்கோட்டை ராஜா**

போதுமென்று பட்டு மாமிதான் வரவழைத்தாள். அவளின் வரவு இவனுக்குள் நேர்த்தியான மாற்றங்களை உண்டு பண்ணியது பாவம், பட்டு மாமிக்குத் தெரியாது.

தினம் பார்த்தாற்போல் மொட்டை மாடியிலேயே அடைந்து கிடந்த தியாகராஜன் இவன் வீட்டுக் கொல்லைப்புறத்தில் ஓடிய காவிரியில் குளிக்க வருகையில்—பாத்திரம் துலக்க வருகையில்—துணி துவைக்க வருகையில் கல்யாணியைத் தரிசித்துத் தனக்குள்ளே காதலை வளர்த்துக் கொண்டான்.

'அவள் கேட்டாள்' என்பதற்காக அருநெல்லி மரத்தை எத்தனையோ முறை மொட்டை அடித்திருக்கிறான். அவளிடம் காதலை வெளிப்படுத்தச் சந்தர்ப்பங்கள் கிடைக்காது போனாலும் அவளும் தன்னைக் காதலிப்பதாய்த்தான் இவனுக்குத் தோன்றியது. இல்லாவிட்டால் ஜாதி வரம்பைத் தாண்டி இந்த 'மேலத் தெரு' அந்த 'அக்ரஹாரத்'தை நாடியிருக்காது!

விவசாய வேலைகளைக் கவனிப்பதற்காகத் தஞ்சாவூர் சென்று ஒருமுறை இவன் ஒரு மாதம் தங்கிவிட நேர்ந்தபோதுதான் அந்த விபரீதம் நடந்து வைத்தது!

ஊரிலிருந்து திரும்பியவன் ஒவ்வொரு நாளும் காவிரிக்கரைக்கு கல்யாணியை எதிர்பார்த்து ஏமாந்து அம்மாவிடம் கேட்டே விட்டான்....

''ஏம்மா, நம்ம, வீட்ல நெல்லிக்கா பொறுக்க வருவாளே கல்யாணி, இப்போ எங்கே அவளைப் பார்க்கவே முடியல்லே?''

''அதுவா....பாவம்டா அந்தப்பொண்ணு. பட்டணத்துல இருந்த அவளோட அக்கா திடீர்னு செத்துப் போயிட்டா... குஞ்சு குழுவோட மருமகப் பிள்ளை கஷ்டப்படறதைப் பார்க்கப் பொறுக்காத பட்டு மாமி, கல்யாணியை அவருக்கே ரெண்டாந்தாரமாக் கட்டிக் கொடுத்திட்டா.... நம்ம வீட்லே வந்து நெல்லிக்கா பொறுக்கிக்கிட்டிருந்த பொண்ணு இப்போ பட்டணத்துல குடும்பம் நடத்தறாளாம்.... கேட்கவே வேடிக்கையா இருக்குதில்லே?''

கல்யாணியும் எட்டாக் கனியாகிப் போனதும் மனத்தில் மீண்டும் வெறுமை ஆக்ரமித்துக் கொண்டது. அன்றிலிருந்து தனிமையை நேசிக்க ஆரம்பித்தான்.

மகனின் இந்த மாற்றத்திற்கான காரணம் புரியாமல் குழம்பிய இவன் அம்மா திருமணம் செய்து வைக்க முயன்றபோது, ''அம்மா, நான் இப்படியே பிரம்மச்சாரியா இருந்திட்டுப் போறேன்.... எனக்குக் கல்யாணம் பண்ணி வைக்க முயற்சி பண்ணினியோ கருமாதி பண்ண வேண்டிய சூழ்நிலையை உண்டாக்கிடுவேன்!'' என்றுமிரட்டி, திருமணத்தை வெறுத்தான்.

பிள்ளைக்குக் கல்யாணமாகாத ஏக்கத்திலேயே அந்தத் தாய் மனம் ஆகாயம் நோக்கிப் பறந்தது!

பின் வந்த நாட்களில் விவசாயத்தில் தன்னை ஐக்கியப்படுத்திக் கொண்ட இவன் நில மகளை உரிமையாக நேசித்தான். கல்யாணியைத் தன் மனக்கோயில் தெய்வமாக்கிப் பூஜித்தான். மானசீகமாய் அவளோடு வாழ்க்கை நடத்த ஆரம்பித்த இவன் பிரம்மச்சர்ய விரதம் பூண்டான்.

* * * * *

அருநெல்லி மரத்தைக்கிழித்துக்கொண்டு வந்து மொட்டை மாடியில் விழுந்த கல் ஒன்று தியாகராஜனை நினைவுக்குக் கொணர்ந்தது.

'யாராயிருக்கும்' என்றநினைவோடு இவன் சென்றுபார்த்தபோதுகொல்லைப்புறம்வெறுமையாய்க் கிடந்தது.

''ஏய்.... ஓடாதே! நில்லு.... நீதானே நெல்லிக்கா அடிச்சே?'' — இந்தக் கேள்விக்குச் சொந்தக்காரனாய் அடுத்த வீட்டு மொட்டை மாடியில் ராஜா நின்றிருந்தான்.

உடனேயே தியாகராஜனின் பார்வை அடுத்த வீட்டுக் கொல்லைப்புறத்திலும் நின்றிருந்த அருநெல்லி மரத்தடிக்குச் சென்றது.

அங்கு பயந்து நடுங்கியபடி நின்றிருந்த இளம் பெண் — லெட்சுமி! அவள் கல்யாணியின் மகள் என்பது இவருக்குத் தெரியும். தன் கணவனின் 'ரிடயர்மெண்ட்'டுக்குப்பின் கல்யாணி சொந்த ஊருக்கே குடும்பத்துடன் திரும்பிவிட்டிருந்தாள்.

ஒரு கணம் அந்த ராஜாவின் இடத்தில் தன்னையும், லெட்சுமியின் ஸ்தானத்தில் கல்

## பெண்ணைப் பெற்றால் கண்ணீர்தான்!

பெண்ணை மாமியார் வீட்டிற்கு வழியனுப்பும் போது பெற்றோர் கண்ணீர் வடிக்கிறார்களே, ஏன்?

திருமணத்திற்கு முன் இவ்வளவு பாடுபடுத்தினார்களே, திருமணத்திற்குப் பின் என்ன செய்வார்களோ? என்று அஞ்சுகிறார்கள்.

என்னையே, எனது ஒரு பெண்ணின் திருமணத்தின் போது அழ வைத்திருக்கிறார்கள். 'இவர் கவிஞராயிற்றே, கவியரசராயிற்றே' என்ற மரியாதையெல்லாம் இந்த விஷயத்தில் கிடையாது.

பெண்ணைப் பெற்றவன் கண்ணீர் விட்டே ஆக வேண்டும். அவ்வளவு தான்.

ஆதாரம்: கண்ணதாசனின் சுகமான சிந்தனைகள்.

— எம். சிவசுப்பிரமணியன்.





# திண்டாடிய அனுபவம்

போட்டி: 20

உங்களுக்கு மொழி தெரியாத ஊரில் திண்டாடிய அனுபவம் ஏதும் உண்டா? நாங்கள் வாய் விட்டுச் சிரிக்கும்படி எழுதியனுப்புங்களேன்! கீழுள்ள வெற்றிடத்தில் எழுதி, இந்த அரைப் பக்கத்தை முழுமையாகக் கத்தரித்து அனுப்புங்கள். பிரசுரமானால் பரிசு. தவிர ஒருவருக்குக் குலுக்கல் முறையில் விலையுயர்ந்த வி. ஐ. பி. ஸூட்கேஸ்! உறையின் மீது ''திண்டாடிய அனுபவம்'' என்று அவசியம் குறிப்பிட வேண்டும்.

முடிவு தேதி: 30.9.85

இன்னும் 33 வி.ஐ.பி. ஸூட்கேஸ்கள் காத்திருக்கின்றன. அவற்றில் ஒன்று ஏன் உங்களுடையதாக இருக்கக் கூடாது? வாராவாரம்தவறாமல்போட்டியில்கலந்து கொள்ளுங்கள்.

வி.ஐ.பி. ஸூட்கேஸ் பரிசுத் திட்டம்

என் பெயர்: ..............................................

விலாசம்: ..............................................

..............................................

யாணியையும் நினைத்துப் பார்த்த இவர் மனத்தில் விச்ராந்தி மேவிட மௌனியாகிப் போய்த் தன்னைக் கூடிய மட்டும் மறைத்துக் கொண்டு அடுத்த வீட்டில் மேற்கொண்டு நடப்பவைகளை அமைதியாய்க் கவனிக்கலானார்.

''நீதான் நெல்லிக்கா அடிச்சியான்னு கேட்டேன்?'' — ராஜா.

''ஆமா.... ஆமாங்க!'' — லெட்சுமி.

சட்டென்று ராஜா, முகத்திலிருந்த கோப உணர்ச்சிகளை மாற்றிச் சிரித்தான். ''நீதானா, உனக்கு நெல்லிக்கா வேணுமின்னு கேட்டிருந்தா நானே பறிச்சித் தரமாட்டேனா.... நான் ஒருத்தன் வெறுந்தடியனாட்டம் எதுக்கு இங்க இருக்கேன்?'' என்று உரிமையோடு கேட்டவன் மாடியிலிருந்தே நெல்லி மரக் கிளையை எட்டிப் பிடித்துக் காய்களை ஆய ஆரம்பித்தான்.

அவனை அண்ணாந்து பார்த்தபடி தனது திராட்சை விழிகளில் பயம் கலந்து சிரித்த லெட்சுமியின் வாயில் உமிழ் நீர் ஊற்று!

தியாகராஜன் மனத்துக்குள் சிரித்துக் கொண்டார் — 'லெட்சுமி..... ஓ! அப்படியே கல்யாணியை உரித்து வைத்திருக்கிறாள்!'

ஒருகைநிறையநெல்லிக்காய்களைப்பறித்த ராஜா, கீழே பார்த்து, ''லெட்சுமி, அப்படியே கொட்றேன்.... எடுத்துக்கிறியா?'' என்றான்.

''வேண்டாம், வேண்டாம்.... கொஞ்சம் பொறுங்க.... என் மடியை விரிச்சுக்கிறேன். அதிலே கொட்டுங்க!'' என்றவள் 'படக்'கென தாவணியை உருவிப் பாய்மரம் போல் விரித்துப் பிடித்தாள்.

அவளின் அந்தக் கோலம் ராஜாவின் இள மனத்தைச் சற்றே நினைவு தப்ப வைத்ததை இவர் கவனித்தார். கொஞ்ச நேரம் கழித்துச் சுய நினைவுக்கு வந்தவன் கூடிய மட்டும் அவள் மடியைக் குறி வைத்து நெல்லிக் காய்களைக் கொட்டினான்.

லெட்சுமியின் மனம் ஏகமாய் நிறைந்து விட்டதை அவளின் முகமலர்ச்சியே காட்டியது. தன் நன்றியை ஒரு புன்னகையால் அவனிடம் சொல்லிவிட்டுப் புறப்பட்டாள். அது ஒன்றுக்காகவே காத்திருந்ததைப் போல் ராஜா சிநேகமாய்க்கையசைத்தான். மகிழ்ச்சியோடு இறங்கிப் போனான்.

தியாகராஜனுக்கு எல்லாம் புரிந்துவிட்டது. கல்யாணியின் மகள் லெட்சுமியை அடுத்த வீட்டு ராஜா காதலிக்கிறான். 'அவர்களின் காதல் என்னுடையதைப் போல மொட்டிலேயே கருக விடமாட்டேன். இப்போதே அவர்களின் தாய் — தந்தையருடன் பேசி முடிவெடுத்து அந்த இளசுகளின் காதலை நிறைவேற்றி வைக்கப் போகிறேன். நான் தொலைத்திட்ட வசந்தத்துக்கு இப்போது மறு பிறவி கிடைத்திருக்கிறது!'

மாடிப்படிகளில் அவசரமாய் இறங்கிய தன் எஜமானர் பல்கூட விளக்காமல் எங்கே இப்படி அவசரமாகப் போகிறார் என்பது புரியாமல் வேலைக்காரி கனகம் குழம்பி நின்றாள்!

லக்கேஜ் பெட்டித் தயாரிப்புத்
தலைவர்களின் படைப்பு—

# விஐபி
# கன்காரு

வந்திறங்குது இப்போது—

இதோ, ஜெட் யுகக் கட்டமைப்புள்ள புதிய விஐபி கன்காரு! நாகரீக நரம்போடிய அலாதி ஸ்டைலிங். கண்டறியாத வர்ண வகைகள்: பீச் க்ரீம் (செவ்விள மஞ்சள்), டெஸர்ட் பிரவுன் (மணற் கபில நிறம்), மிஸ்ட் க்ரே (பனிச் சாம்பல்), க்ரீம் சாக்கலேட், மேலும் பலப் பல. உட்புறமோ இடவசதி மிகுதி.

ஓட்டோடிப் பார்வையிடுவீர்:
அருகிலுள்ள வியாபாரியிடம்....
சொகுசு லக்கேஜ் புதுவரவுகள்.

## ஆகாயமெட்டும் எங்கள் அதிநவீனக் கற்பனே.




**தேர்ந்தெடுக்க மிகப் பல வகைகள்,
வருங்கால யோக வரவுகளோ மேலும் பலப்பல.**

LINTAS VIP M 10 2013 TM

# இந்த புகைப் படத்தில் எல் ஐ ஸி முகவரை சுட்டி காட்டுங்கள்



## உங்களால் இயலாது என்று உறுதியாக கூறுகிறோம்-ஏனெனில் அவர் குடும்பத்தில் ஓர் அங்கத்தினர்

ஆம். ஒரு தொழில்முறை எல்.ஐ.ஸி. முகவர் தன் வாடிக்கையாளரின் சுற்றத்தில் ஓர் அங்கமாகி விடுகிறார். ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் திட்டங்கள் மூலம் கிடைக்கும் பாதுகாப்பு, சேமிப்பு மற்றும் வரிச் சலுகைகள் பற்றிய ஆய்ந்தறிந்த யோசனைகளை அவர் வழங்குகிறார். குறிப்பாக எக் குடும்பத்தையும் பாதிக்கும் அடிப்படை தேவைகளை திட்டமிடுவதில் அவர் உதவுகிறார்.

உங்கள் நண்பரான எல்.ஐ.ஸி. முகவரை அடுத்த முறை சந்திக்கும்போது, உங்கள் மக்களின் திருமணம், கல்வி மற்றும் வாழ்வு துவக்க செலவுகள் முதலியவற்றை ஈடு செய்யவும், குடும்ப பாதுகாப்பிற்கும் ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் எவ்வாறு பயன்படும் என்பதை கேட்டு அறியுங்கள். மேலும் நீங்கள் பணி ஓய்வு பெற்றபின் வாழ்வை செவ்வனே நடத்த ஆயுள் இன்ஷ்யூரன்ஸில் எவ்வாறு முதலீடு செய்யலாம் என்பதையும் விளக்கும்படி கேளுங்கள். பெருகும் பொறுப்புக்களையும், வளரும் வருவாயையும் எவ்வாறு மேலும் ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் பாதுகாப்புடன் இணைக்கலாம் என்பதையும் விவாதியுங்கள்.

இன்றே உங்கள் முகவரை கலந்திடுங்கள். அவர் உங்கள் தேவையறிந்து நல் யோசனைகள் வழங்கும் நண்பர்.

**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**
1985-86—எல்.ஐ.ஸி யின் முகவர் ஆண்டு.

Pratibha-LIC-85-29 TAM

# முடியாது மாமா முடியாது



"மன்னித்து விடுங்கள் மாமா என்னை! நான் இதற்குச் சம்மதிக்க முடியாது!"

புனிதாவின் உறுதியான இந்தப் பதிலைக் கேட்டு ஸ்தம்பித்துவிட்டார் நீலமேகம்.

ஆமாம் — உண்மைதானே! அவர் எதிர் பார்த்து வந்தது என்ன? இப்போது நடப்பது என்ன?

"வாசுவை வைத்துக் கொண்டு நான் என்னம்மா செய்ய முடியும்?"

"ஏதாவது செய்து கொள்ளுங்கள் மாமா. ஆனால், இங்கு கொண்டு வந்து விடுவதாகச் சொல்கிறீர்களே! அது மட்டும் வேண்டாம். அவ்வளவுதான் நான் சொல்ல முடியும்!"

"பாவம், சின்னப் பையனம்மா அவன்! அவன் விஷயத்தில் இப்படிப் பிடிவாதமும், கடுமையுமாய் இருக்கிறாயே?"

"பிடிவாதமாவது, கடுமையாவது? எனக்குச் சம்மதம் இல்லாத காரியம்! எப்படி நான் ஒத்துக் கொள்ள முடியும்?"

"உன் மாமியார் மட்டும் போன மாதம் அப்படித் திடீரென்று மரணமடையாமல் இருந்திருந்தால், இப்படி உன்னிடம் வாசுவை ஒப்படைக்க நான் வருவேனா? உனக்கு அப்படி என்னம்மா கோபம் அந்தச் சிறுவனிடம்?"

"அதெல்லாம் ஒன்றுமேயில்லை. எப்போதும்போல் வாசுவை உங்களிடமே வைத்துக் கொள்ளுங்கள். வேண்டுமானால் அவனது படிப்புச் செலவுக்காக மாதா மாதம் ஒரு தொகையை அனுப்புவதற்கு இவரிடம் சொல்லி ஏற்பாடு செய்கிறேன்!"

"அது ஏனம்மா அனாவசியமாய்? நான் உன்னிடம் கேட்டுக் கொள்வதெல்லாம், வாசுவை இங்கேயே வைத்திருந்து...."

"அதைப்பற்றித்தான் 'பேசாதீர்கள் பேசாதீர்கள்' என்று எத்தனை தடவை உங்களிடம் சொல்வது, மாமா?"

"ஏனம்மா — வாசுவுக்கு இங்கே தங்கவும், இங்கேயே இருந்து கொண்டு படிக்கவும் உரிமையில்லையா?"

"இல்லை என்று யார் சொன்னது மாமா? வாசு என் கொழுந்தன்தான். இவரது உடன் பிறந்தவன்தான். அதற்காகத்தான் மாதா மாதம் பணம் அனுப்புவதாகக் கூறுகிறேனே! நீங்கள் இருப்பதும் வசதிகள் நிறைந்த ஊர் தானே? அங்கேயே அவனைத் தாராளமாகப் படிக்க வைக்கலாமே?"

நீலமேகம் பதில் எதுவும் பேசத் திராணி யற்றவரானார்.

"ம்... என் போதாத காலம்!" என்று தனக்குள் முனகிக் கொண்டே சிறுவனைத் தன்னுடன் கூட்டிக் கொண்டு ஊர் திரும்பி விட்டார்.

இங்கே —

புனிதா புலம்பினாள்: "மாமா! என்னைக் கல் நெஞ்சக்காரி என்றும் கொடுமைக்காரி என்றும் முடிவு கட்டியிருப்பீர்கள்! தெரியும் எனக்கு! அப்படியே இருக்கட்டும். ஆனால் உங்களுக்குத் தெரியுமா மாமா? வாசு என் குழந்தைபோல! அவன் மீது எனக்கு எவ்வளவு அன்பும், பாசமும் தெரியுமா! அவன் நல்லவன் களங்கமற்றவன். இதேபோல் அவன் என்றும் நல்லவனாகவும், கண்ணியமானவனாகவும் வளர்ந்து வர வேண்டும் என்பதற்காகவே நான் உங்களிடம் என் மனத்தை இறுக்கிக் கொண்டு அவ்வாறு நிர்த்தாட்சண்யமாகப் பேசினேன். ஏனெனில் வளரும் பயிராகிய அவன் இங்கேயே தங்கிப் படித்தால், இவருடைய அத்தனை குணங்களையும், பழக்க வழக்கங்களையும் முன்மாதிரியாகக் கொண்டல்லவா வளர்வான்? ஆமாம், மாமா! இவர் — உங்கள் மூத்த மகன் — முன்புபோல் இல்லை. ஆள் முற்றிலுமாக மாறி, தறி கெட்டுப் போய் விட்டார். பல கெட்ட பழக்கங்கள்.... வேண்டாத குணங்கள்.... மன்னித்து விடுங்கள் மாமா என்னை!"

— அன்பிற்கினியவன்



# "நான் உ…
# மறந்த அ…
# எதி…

ஒருமுறை அமைச்சராகப் பதவி வகித்தாலே மூன்று நான்கு தலைமுறைகளுக்குத் தேவையான சொத்துச் சேர்த்து விடும் அரசியல்வாதிகள் வாழ்ந்து கொண்டிருக்கும் இந்தக் காலத்தில், நேருவின் அமைச்சரவையில் அமைச்சராகவும், நேரு, சாஸ்திரி ஆகியோர் மறைந்த சமயங்களில் இரண்டு முறை இடைக்காலப் பிரதமராகவும் பின் இந்திரா காந்தி அமைச்சரவையிலும் அமைச்சராகப் பதவி வகித்த திரு குல்ஜாரி லால் நந்தா இப்போது எப்படியிருக்கிறார்? பொருளாதார வசதியின்றிச் சிரமப்படுகிறார். எனவே அவருக்குக் கொடுக்கப்படும் உதவித் தொகையை ஐந்நூறிலிருந்து இரண்டாயிரமாக உயர்த்த வேண்டும் என்றுகூட இ. காங்கிரஸ் எம். பி. யான பன்வாரிலால் புரோகித், லோக் சபையில் பேசினார். உண்மையில் திரு நந்தா அப்படித்தான் இருக்கிறாரா? திரு நந்தா அவர்களை நேரில் சந்தித்துப் பேசிவிட்டு வந்த நமது நிருபர் எழுதுகிறார்.....

– ஓ…

பஞ்சாக்கரப் பகுதியான டெ…
டிபன்ஸ் காலனியிலிருக்கும் A–331…
னுள்ள ஒரு மூலை வீட்டின் முதல் மா…
வாடகைக்குப் பிடித்திருக்கும் ஓர் அறை…
நடுத்தரக் குடும்பத்தில் காணப்படும் ப…
சர் கூடக் காணப்படவில்லை. நான்…
பேர் அமருவதற்கு வசதியாகத் தரை…
விரிக்கப்பட்ட மெத்தை. சுவர் ஓர…
திண்டுகள். நான்கைந்து பிளாஸ்டிக் …
களில் தினசரிப் பத்திரிகைகள். ஒரே…
மர பீரோ. அதன் மறைவில் ஒரு ப…
மேஜை; ஒரு பழைய டைப்ரைட்டர்…
ரோரமுள்ள ஸ்டீல் அலமாரியில் க…
கட்டாக சைக்ளோஸ்டைல் செய்யப்…
காகிதங்கள். ஒரேயொரு வேலைக்க…
பையன்.

— இதுதான் எண்பத்தொன்பது…
தான திரு குல்ஜாரி லால் நந்தா அவ…
வசிக்கும் வீடு! இரண்டு முறை இடைக்க…
பிரதமராகப் பதவி வகித்தவரின் வீடு…
படித்தான் இருக்குமா?

"எவ்வளவோ பர்னிச்சர்கள் இருந்…
ஒரு பெரிய நூலகமே என்னிடம் இருந்…
ஆனால் இப்போது எல்லாமே சிதறிப் …
விட்டன. நானாகவே பல நண்பர்களு…
கொடுத்தும் விட்டேன். எனக்கு மிக…
அவசியமான பொருள்களை மட்டும்…

" அ…



# …ழலை எதிர்த்தேன், …மைச்சர்கள் என்னை …த்தார்கள்!’’

## …முன்னாள் பிரதமரின் அனுபவம்

வைத்திருக்கிறேன். ரேடியோவிலும் டி.வி.யிலும் எனக்கு நாட்டமில்லை; அதனால் வாங்கவில்லை. எனக்கு வரும் ஐந்நூறு ரூபாய் பென்ஷன்தான் எனது வருமானம். அதற்கேற்பச் சிக்கனமாகச் செலவு செய்து கொள்கிறேன். எனது துணிகளை நானே துவைத்துக் கொள்கிறேன். இஸ்திரி போடுவதுகூட வீண் செலவு என்பதால் செய்வதில்லை. ஆனாலும் சில பொது இடங்களுக்குப் போகும்போது இஸ்திரி போட்ட துணிகளை அணிந்து கொண்டுதான் போகிறேன்....!'' என்று எனது வியப்புக்கு விடை கூறுவதுபோல் பேசிக் கொண்டே வந்தார்.

அவர் கைகளை அசைத்துக் கொண்டு பேசியபோது, அவர் அணிந்திருந்த பைஜாமாவின் ஓரத்தில் கிழிந்திருந்த பகுதியை உருட்டுப் போட்டுத் தைக்கப்பட்டிருந்தது தெரிந்தது. அவரேதான் தைத்துக் கொண்டிருக்க வேண்டும்! ''ஆமாம், பென்ஷனைத் தவிர உங்களுக்கு வேறு வருமானமே இல்லையா? பிள்ளைகள் என்ன செய்கிறார்கள்?'' என்று கேட்டேன்.

''நான் ஒன்றும் வறுமையில் வாடவில்லை. எளிமையாக வாழ்கிறேன். எனது வரவுக்குள் செலவு செய்யப் பார்க்கிறேன். குருக்ஷேத்ரா அருகில் கொஞ்சம் நிலம் இருக்கிறது. அதைக் குத்தகைக்கு விட்டிருக்கிறேன். அதன் மூலம் ஆண்டொன்றுக்குச் சுமார் எட்டாயிரம் ரூபாயிலிருந்து பத்தாயிரம் வரை கிடைக்கும். அதை அப்படியே நான் ஈடுபட்டிருக்கும் பொதுப் பணிக்குச் செலவழித்து விடுகிறேன்.

''மூத்த மகன் மகராஜ் கிருஷ்ண மேத்தா பம்பாயில் இருக்கிறான். இளையவன் நரேந்திரகுமார் நந்தா ஆரோநாடிக்ஸ் பயிற்சி பெற்றவன்; ஆமதாபாத்தில் இருக்கிறான். மனைவி அவனுடன்தான் இருக்கிறாள். ஒரே மகள் திருமதி புஷ்பா நாயக். நான் எதற்காகப் பிள்ளைகளின் ஆதரவில் இருக்கவேண்டும்? எனக்கு வேறு வேலைகளே இல்லையா என்ன?''

''அப்படி என்ன வேலைகள்?''

''கடந்த அறுபத்து மூன்று ஆண்டுகளாகப் பொதுப் பணிகளில்தான் ஈடுபட்டுள்ளேன். எனது இருபத்து மூன்றாவது வயதில் பம்பாய்ப் பல்கலைக் கழகத்தில் எம். ஏ. முதலாவதாகத் தேர்ச்சி பெற்று, சட்டம் படித்து விட்டுப் பிறகு தொழிலாளர் நிலை பற்றி ஆமதாபாத்திலும் பம்பாயிலும் ஆராய்ந்து வந்த அந்த நாளில்தான் எனக்கு காந்திஜியின் தொடர்பு ஏற்பட்டது.

''அப்போது மணமாகி ஒரு குழந்தைக்கும் தந்தையாகிவிட்டிருந்தேன். வயதான பெற்றோர்கள். இருந்தாலும் முழு நேரமும் தேசப் பணியில் ஈடுபட விரும்பினேன். அதற்கான காரியங்களிலும் இறங்கிவிட்டேன். அப்போது எனது குடும்பம் பொருளாதாரக் கஷ்டத்தில் தவித்தது உண்மை. அந்தச் சமயத்தில் எப்படியாவது மாதம் நாற்பது ரூபாயை என் குடும்பத்திற்கு அனுப்பியிருந்தால் அவர்களுக்கு மிகமிக உதவிகரமாக இருந்திருக்கும். முடியவில்லை. என்ன செய்வது? நாடு நலம் பெறச் சில தனி மனிதர்களும், குடும்பங்களும் சிரமப்பட்டுத்தான் ஆக வேண்டும் என்று என்னை நானே சமாதானப்படுத்திக் கொண்டேன்!''

''அப்போதைய அரசியலுக்கும் இப்போதைய அரசியலுக்கும் ஏதாவது வித்தியாசம் தெரிகிறதா?''

''அப்போது அரசியல் எதிரிகள்கூடப் பண்போடு இருந்தார்கள்!'' என்று நாசூக்காகச் சொன்னார் திரு நந்தா.

சுதந்திர பாரதத்தில் சில காலம் மகாராஷ்டிர மாநிலத்தில் அமைச்சராக இருந்த திரு நந்தாவை நேருஜிதான் மத்திய அரசுக்கு அழைத்துக் கொண்டாராம். தாம் மத்திய அமைச்சராக இருந்தபோது ஒரேயொரு விஷயத்தை மட்டும் தெளிவாகத் தெரிந்து கொண்டாராம். ''அரசாங்கத்தின் நல்ல நல்லதிட்டங்களெல்லாம் ஒழுங்காகச் செயல்படுத்தப்படுவதென்பது அதிகாரிகளிடம் மட்டும் இல்லை. அது பொது மக்களின் பொறுப்புணர்ச்சியையும் பொறுத்திருக்கிறது. பொது மக்களின் பொறுப்புணர்வும் ஒற்றுமையுடன் கூடிய உறுதியான இயக்கமும் இல்லாவிட்டால் அதிகாரிகள் கவனிக்க மாட்டார்கள். அந்தத் திட்டங்களும் மக்களி

…ரட அலுவல்களைக் கவனிக்கிறார்....



டப் போய்ச் சேராது என்பதுதான் அது!'' என்றார்.

'பாரத சேவா சமாஜம்' இயக்கத்தை நேருஜியின் பூரண ஆதரவுடன் தொடங்கினோம். அரசியல் கலப்பு சிறிதும் இல்லாத இயக்கம் அது. அதோடு இப்போது 'சிடிசன்' சென்ட்ரல் கவுன்சில் போன்ற இயக்கப் பணிகளும்தான் முழு நேரப் பணிகளாகி விட்டன திரு நந்தாவுக்கு!

பொது வாழ்வில் சமூக ஒழுக்கத்தையே முதன்மையாகக் கருதும் இவர், ''சமூக ஒழுக்கம் இல்லாமல் என்ன பொருளாதார வளம் வேண்டிக் கிடக்கிறது? நமது பரம்பரைப் பண்புகளைப் போற்றி எளிமை, தூய்மை, வாய்மை ஆகியவற்றின் உயர்வை மக்களுக்கு உணர்த்தினால் வறுமைக்கே இங்கு இடமில்லை. நமக்குள்ள கஷ்டமெல்லாம் ஒழுக்கமில்லாமையால் வருவதுதான். அதனால்தான் ஊழல் என்பது ஒரு தொடர் சங்கிலியைப் போல் தொடர்ந்து கொண்டிருக்கிறது. உண்மையில் இன்றுள்ள விலைவாசிப் பிரச்னை கூடப் பொருளாதாரப் பிரச்னை அல்ல. ஒழுக்கக் குறைவால் ஏற்பட்டிருக்கும் பிரச்னைதான்! காந்திஜி, ராஜாஜி, போன்றோரின் கருத்துக்களை இப்போதாவது புரிந்து கொள்ள வேண்டும்!'' என்று அழுத்தமாகச் சொல்கிறார்.

''இன்றையப் பிரதமரின் அணுகு முறை எப்படி?''

''நன்றாக இருக்கிறது. ஊழலைக் களைய முயல்கிறார். அவர் அளவில் மட்டும் முயன்றால் போதாது. மக்களிடையே ஓர் இயக்கமாக அந்த முயற்சி பரவ வேண்டும். இது பற்றியெல்லாம் அவருக்கே விரிவாக எழுதியிருக்கிறேன். நான் உள்துறை அமைச்சராக இருந்தபோது ஊழலைக் களைய எடுத்த முயற்சிகளுக்காகவே எனக்கு எதிர்ப்புத் தோன்றியது. அதனால் இந்திரா காந்தியின் சமாதானத்தையும் பொருட்படுத்தாமல் நானே பதவி விலகிவிட்டேன். பிறகு கொண்டு வரப்பட்ட எமர்ஜென்ஸியையும் பகிரங்கமாக எதிர்த்தேன்!'' என்று பழைய விஷயங்களையும் நினைவுபடுத்திக் கொண்டார் திரு நந்தா.

இந்த எண்பத்தொன்பதாவது வயதிலும், ஒல்லியாக இருந்தாலும் — ஆரோக்கியமாகக் காணப்படுகிறார். கூர்மையான கண்கள்; தெளிவான பேச்சு; மெதுவாகப் பேசினாலும் கேட்டுக் கொள்ளும் காதுகள். இதற்கெல்லாம் தம்மிடம் எந்தக் கெட்ட பழக்கமும் இல்லாமலிருப்பதுதான் காரணம் என்கிறார் அவர். தினமும் காலையில் எழுந்து தவறாமல் தியானம் செய்கிறார். பிறகுதான் பேப்பர்களைப் படிக்கிறாராம், சொன்னார்.

இப்போது 'பாரதீய லோக் மஞ்ச்', 'நேஷனல் போரம் பார் பீஸ்', 'செக்யூரிட்டி அண்ட் ஜஸ்டிஸ்' போன்ற அமைப்புக்களின் மூலம் நாடு முழுவதுமுள்ள மக்களின் ஆக்கபூர்வமான ஒத்துழைப்பைத் திரட்டி, மீண்டும் பழைய ஒழுக்கத்தை நிலைநாட்டப் பாடுபட்டு வருவதாகச் சொன்ன திரு நந்தா ''எனது இந்த முயற்சிக்குத் தமிழ் நாட்டிலிருந்து நிறைய ஆதரவையும் ஏராளமான தொண்டர்களையும் எதிர்பார்க்கிறேன். 'கல்கி'யின் மூலம் இதைத் தெரியப்படுத்துங்கள்!'' என்றார்.

சந்திப்பு: நமது நிருபர்

படங்கள்: சரஸ்வதி

# அடுத்த இதழில்...

ராஜீவ் — லோங்கோவால் ஒப்பந்தம் ஜனநாயகத்தைக் காக்குமா? அல்லது பயங்கரவாதிகளால் சிதைக்கப்படுமா?



## பஞ்சாப் தேர்தல்கள்

— Special Report

# 23

பஞ்சாபி எழுத்தாளர் கர்தார் ஸிங் தூக்கமா போதையா என்று புரியாத ஓர் அரை மயக்கத்தில் இருந்தார். வெளியுலகம் கொஞ்சமும் கண்ணுக்குத் தெரியாதபடிக்கு ஜன்னல்களையும் கண்ணாடிக் கதவுகளையும் கனமான திரைச் சீலைகள் மறைத்திருந்தன.

வெளியுலகத்துடன் தொடர்பு கொண்டே வெகு நாட்களாகிவிட்டது. அவரைப் பார்க்க வருகிற சீக்கிய நண்பர்களையும் உறவினர்களையும் பார்த்து 'அவர்களது ஒரே மாதிரியான பேச்சைக் கேட்டு அலுத்துவிட்டது.

''ஓ! எனக்குச் சுவாசிக்கப் புதிய காற்று வேணும்!'' என்று அவர் முணுமுணுத்துக் கொண்டார்:

''ஏதாவது சொல்லணும்னா தெளிவாச் சொல்லேன்!'' என்று ஏதோ பத்திரிகையைப் புரட்டிக் கொண்டிருந்த ரூபா எரிந்து விழுந்தாள்.

அவர் திடுக்கிட்டுக் கண்ணை முழுவதும் திறந்து பார்த்துப் பிறகு ஆயாசத்துடன் மூடிக் கொண்டார்.

'ஷி இஸ் நௌ எ ந்யூராட்டிக்!' என்று தமக்குள் சொல்லிக் கொண்டார். சில வருஷங்களாகவே இவளுடன் சரி சமமாக சம்பாஷிக்க விஷயங்கள் இல்லாமற் போய்விட்டது. இப்பொழுது வாயே திறக்க முடியாது. திறந்தால் ஆபத்து. அழுவாள். சீறுவாள். வெடிப்பாள். இந்தத் தில்லியைப் பஸ்மமாக்கும் வெறியைக் கொண்டவள் அவள் இப்போது.

தனது கோபத்தையெல்லாம் இப்பொழுது அவளது உள்ளங்கைகளில் புதைத்து வைத்துக் கொண்டிருக்கிறாள், பயத்தில். சீக்கியச் சிநேகிதர்கள் எதிரில் மட்டும் மூடிய கதவுகளுக்குள் அதை அவள் வெளிக்காண்பிக்கும் போது அவரது அடிவயிற்றில் ஒரு சங்கடமேற்படுகிறது. புரியாத காரணங்களுக்காக, புரியாத நிர்ப்பந்தங்களுக்காக வாய் மூடிக்காத்த மௌனம், குற்றம்சாட்டுவதாகப் பீதி ஏற்படுகிறது.

இந்தப் பீதி சத்யமானது. எத்தனை பெக் ஸ்காட்ச் விஸ்கி உள்ளே போனாலும் தொண்டையில் வரட்சியை ஏற்படுத்தும் பீதி. சென்ற மாதம் கலவரம் ஆரம்பித்ததும், உசிரைக் கையில் பிடித்துக் கொண்டு அவரும் ரூபாவும் ஜன்பத் ஹோட்டலில் அறையெடுத்து ஒளிந்து கொண்ட நான்கைந்து நாட்களும் அனுபவித்த மரண பயம்தான் இன்றைய ரூபாவின் நியூராஸிஸ்ஸுக்குக் காரணம். பண வசதியும் செல்வாக்கும் இருவரது உயிரையும் காப்பாற்றிற்று. இல்லாவிட்டால் என்ன வேண்டுமானாலும் ஆகியிருக்கும்....

''குடிக்கிறது தவிர உனக்கு வேறே யோசனை கிடையாதா? நான் ஒருத்தி மனுஷியா உட்கார்ந்திருக்கிறது கண் தெரியல்லையா?''

கர்தார் ஸிங் சிரமப்பட்டுக் கண்களை மலர்த்தினார்.

''தெரியல்லே!'' என்று தலையை அசைத்தார். ''ஏன்னா நீ இப்ப ஒரு ஸைஃபர்!''

''நீ? நீ மட்டும் என்ன?'' குரலில் தெறித்த ஆக்ரோஷம் நரம்புகளில் ஒரு ஜில்லிப்பை ஏற்படுத்திற்று.

''நான் எப்பவுமே ஸைஃபர்!'' என்றார் அவர் வருத்தத்துடன்.

''நான் நானாக எப்பவுமே இருக்க முடிஞ்சதில்லே. ஏதாவது ஒரு நிர்ப்பந்தம் என்னைக் கட்டிப் போட்டு வருகிறது. அந்தப் பெண் என்னைச் சரியாத்தான் எடை போட்டாள்!''

''எந்தப் பெண்?''

''நாலு ஐந்து மாசங்களுக்கு முன் என்னைப் பேட்டி காண வந்தாளே, ஒரு மதராஸிப் பெண்!''

''எனக்கு எவளையும் ஞாபகம் இல்லே!''

''உனக்கும் அவளுக்கும் சம்பந்தமில்லாத போது உனக்கெப்படி ஞாபகம் இருக்கும்?''

''உனக்குச் சம்பந்தமிருக்குங்கறியா?'' ரூபாவின் குரலில் தொனித்த பொருமையைக்கண்டு அவருக்குப் பரிதாபமேற்பட்டது. கடந்த மாதம் ஏற்பட்ட அதிர்ச்சியில் இப்பொழுது மூப்பு வெளிப்படையாகத் தெரிந்தது. எத்தனை அதிர்ச்சி ஏற்பட்டாலும் இவள் சுபாவம் மாறாது என்று நினைத்தபடி அவர் விஸ்கியை நிதானமாய் உறிஞ்சினார்.

''அந்தப் பொண்ணோடு தொடர்பு வைத்துக் கொண்டிருக்கணும். நல்ல கெட்டிக்காரப் பெண். அழகியும் கூட. அழகும், புத்திசாலித்தனமும் சேர்ந்தால் ஒரு தனிக் கவர்ச்சி இருக்கத்தான் செய்கிறது!''

''நீ ஒரு பித்துப் பிடித்தவன்!''

அவர் வாய்விட்டுச் சிரித்தார். ''பொருமைப்படாதே! அந்தப் பெண்ணை ஒரு நாளைக்கு இங்கே கூப்பிடப் போறேன். என் கவிதைகளைப் படித்துக் காண்பிக்க!''

ரூபா விடுக்கென்று எழுந்தாள். ஆங்காரத்துடன் அவர் கையிலிருந்த விஸ்கி கிளாஸைப் பிடுங்கி மேஜைமேல் ஓசையுடன் வைத்தாள். விஸ்கி தெறித்துக் கீழே விரித்திருந்த கம்பளத்தில் தெறித்தது.

''உனக்கு வெட்கமாயில்லே இப்படிப் பேச? உனக்குச் சொரணையே கிடையாதா? எதுவுமே நடக்காத மாதிரி உன்னால எப்படிப் பேச முடிகிறது? இன்னும் பெண் பித்துப் பிடித்து அலைய முடிகிறது? உசிரை வயித்திலே மறைச்சு நாலு நாள் பதுங்கியிருந்தது மறந்து போச்சா? உறவுக்காரர்களிலே ரெண்டு பேர் எரிஞ்சு போனது மறந்து போச்சா? நம்ம ஜனங்களுக்கு நேர்ந்த கதி மறந்து போச்சா?''

அவள் வெறி பிடித்தவள்போல் அவருடைய தோளைப் பலமாக உலுக்கினாள்.

அந்த மூர்க்கத்தனத்தில் ஸ்தம்பித்து அவர் சில விநாடிகள் மௌனமாக அமர்ந்திருந்தார். அவளது பிடியின் பலத்தில் தான்




ஆபிரகாம்லிங்கன் மரணம் அடைந்த போது இரவு மணி 10.08. அப்போதைய அமெரிக்க அரசாங்கம், கடிகார கம் பெனிகள் அந்த நேரத்தைத் தங்கள் விளம்பரங்களில் காண்பித்தால் சலு கைகள் அளிப்பதாக அறிவித்தது. அதன் படி அனேக கடிகார விளம்பரங்கள் 10.08 என்ற நேரத்தைக் காட்டுவதாக அமைந்திருந்தன. இந்த வழக்கம் மெது வாக உலகம் முழுவதும் பரவத் தொடங் கியது. இப்போதும் பெரும்பாலான விளம்பரங்களில் முட்கள் 10.08 என்றே காட்டிக் கொண்டிருக்கின்றன.

—எம். சிவசுப்பிரமணியன்.

---

நொறுங்கிப் போய்விடுவோம் என்கிற பிர மையும் அதைத் தொடர்ந்து வியப்பும் ஏற் பட்டது.

எத்தனை பலம் இவளுக்கு, அசுர பலம்! இவளிடமிருந்து என்னை விரட்டுவது கூட இவளது இந்த அசுரத்தனம்தான். லௌகீக, பாமர விஷயங்களில் இவளுக்கிருக்கும் பிடி மானம்கூட ஓர் அசுரத்தனம்தான். எந்த அவ மானத்தையும் ஏமாற்றத்தையும் இவள் தாங்க மாட்டாள். அவரைக் கீழ் நோக்கி வெறித்த அந்தக் கண்களில் தெரிவது ஒரு பெண் புலி யின் கோபம். வாஹே குரு. இவள் என் மனைவி!

அவர் கண்களை முழுவதும் திறந்து, "உன் கையை எடு!" என்றார்.

அவள் எடுக்காமல் வீம்புடன் நின்றிருந் தாள்.

"ஐ ஸே, டேக் அவே யுவர் ஹாண்ட்ஸ்!"

அவர் போட்ட பெரிய கூச்சலில் அவள் துவண்டு கைகளை எடுத்தாள்.

"என்னை என்ன செய்யணும்னு சொல்றே? நான் என்ன செய்ய முடியும்னு நினைக்கிறே? எனக்கு என்ன பலமிருக்கு, அதிகாரமிருக்கு, எதையும் செய்ய? நடந்ததைப் பத்தியெல் லாம் கண்டித்து எழுதியாகிவிட்டது. டீ.வி. யிலே சொல்லணும்னு சொன்னே, அதை யும் செய்துட்டேன். எனக்கு நிம்மதியைத் தருவது இந்த விஸ்கி; பெண்களைப் பற்றிய நினைப்பு. நினைப்புத்தான், கவனி. ஓடியாடின காலமெல்லாம் போய்விட்டது. இப்பொழுது நான் ஏன் என் சுபாவத்தை மாத்திக்கணும்? நீ தலைக்குச் சாயம் பூசறதையும் கிர்பால் ஸிங்கோடு சரசமாடறதையும் நிறுத்திக் கொண்டிருக்கிறியா?"

அவள் திடுக்கிட்டு அவரைப் பார்த்தாள்.

"யூ ஆர் டிஸ்கஸ்டிங்!" என்று கோபத் துடன் சொல்லிவிட்டு அறையைவிட்டுவெளி யேறினாள்.

'ஆ, உன் பலவீனத்தைச் சொன்னால் உனக்குத் தாங்காது' என்று அவர் தனக்குள் முணுமுணுத்துக் கொண்டார்.

மீண்டும் ஸோபாவில் நன்றாகச் சாய்ந்து உட்கார்ந்து கால்களை எதிரில் இருந்த ஸ்டு லின் மேல் நீட்டிக் கண்களை மூடிக் கொண் டார்.

இந்தப் பஞ்சாப் பிரச்னைகளும் பிரதமரின் மரணமும் பிறகு நடந்த கலவரங்களும் தன் வாழ்வை எத்தனை பாதித்திருக்கின்றன என்று நினைத்து ஆச்சரியமேற்பட்டது. பாகிஸ்தான் பிரிவினைக்குப் பிறகு ஓர் அரசியல் விஷயம் பாமர மனிதனின் வாழ்வை மிகவும் பாதித் திருப்பது இதுதான் என்று அவர் நினைத்துக் கொண்டார்.

நிர்விசாரமாய் உழைத்துச் சம்பாதித்து உல்லாசமாய், மெதப்பாய், திமிராய் வளைய வந்த சாதாரண சீக்கியனைப் பல்வித நிர்ப் பந்தங்களுக்குள்ளாக்கிய விஷயம் இது. என் எழுத்தை மாற்றி, எண்ணங்களை மாற்றி, ஆளை மாற்றி —

யாருக்காக எழுதுகிறேன்? யாருடைய எண்ணங்களைப் பிரதிபலிக்கிறேன்?

நான் நானாக இருக்க ஏன் பயப்படுகிறேன்?

அவருடைய கண்களில் திடீரென்று நீர் நிறைத்தது. அடக்க முடியாமல் பெருகித் தாடியை நனைத்தது.

அவருடைய பணக்காரச் சீக்கிய நண் பர்கள் தில்லியிலும், சுற்றுப்புறத்திலும் இருக் கும் தங்கள் சொத்துக்களை விற்க ஆரம்பித் திருந்தார்கள், பஞ்சாபுக்குக் குடி போய்விடும் எண்ணத்துடன். ரூபா கானடாவுக்குப் போய் விடலாம் என்று நச்சரித்துக் கொண்டிருந் தாள். அங்கு அவளுடைய தங்கையும் அவள் புருஷனும் பிரஜைகளாக இருந்தார்கள். வீட்டை மாற்றுவது போல்தான் தேசத்தை மாற்றுவதும் என்று ரூபா நினைத்துவிட்டதாக அவருக்கு எரிச்சல் ஏற்பட்டது. பிடிவாதமாக மறுக்க வைத்தது. அதனால் கிளம்பிய வாக்கு வாதங்களிலிருந்து தப்பிக்க அதிக ஸ்காட்ச் விஸ்கி தேவைப்பட்டது.

இப்பொழுதெல்லாம் நினைவு அடிக்கடி முப்பத்தி ஏழு வருஷங்கள் பின்னோக்கிச் சென்று பீதியுடன் நின்றது. அன்று அனு பவித்த பயமும் நிராசையும் துயரமும் இன்றும் பசுமையாக இருக்கிறது. பாகிஸ்தான் பிரி வினையால், பிறந்த லாஹூர் மண்ணை விட்டு, நான் ஒரு சீக்கியன் ஆன காரணத்தால் நான் ஓர் இந்தியன் என்கிற நினைப்புடன் அகதி யாய் எல்லையைத் தாண்டி இந்தியாவுக்குள் காலடிவைத்ததும்....வழியில்கூடப்பயணித்த ஒரு சீக்கியக் கிழவன் தன் கைப்பிடியில் இருந்த ஒரு சிறுவனைக் காட்டி, 'இவன்தான் என் குடும்பத்தில் மிஞ்சியவன். இவனை இந் தியாவுக்கு அழைத்துப்போ. இவனாவது உயிர் வாழணும்' என்று அந்தச் சிறுவனை அவர் தலையில் கட்டப் பார்த்ததும் அடிக்கடி ஞாப கத்துக்கு வந்தது. இன்றைக்கு அந்தக் கிழ வன் உயிரோடு இருந்தால் என்ன பாதிப்பு அவனுக்கு ஏற்பட்டிருக்கும் என்று கற்பனை விரிந்தது.

மீண்டும் பிரிவினை என்கிற பேச்சும் சுயாட்சி என்கிற வார்த்தையும் அவருடைய சீக்கிய நண்பர்களின் வாதங்களில் அடிபட ஆரம்பித்திருக்கிறது. அந்தப் பேச்சு அவருள் பீதியைக் கிளப்புகிறது. முப்பத்தேழு வருஷங்களுக்கு முன் உடுத்திய துணியுடன் கால் கொப்புளிக்க, உயிரைக் கையில் ஏந்தி, பக்கத்தில் பேழையைத் தோளில் சுமந்து நடந்த அந்தக் கிழவனின் புலம்பலுடன் எல்லையைக் கடந்த ஞாபகம் மூளையைத் தாக்கிச் செயலிழக்கச் செய்கிறது. "நீங்கள் எல்லாம் முட்டாள்கள்!" என்று கத்த வேண்டும் போல் இருக்கிறது. 'ரூபாவுக்கும் உங்களுக்கும் ஒரு வித்தியாசமும் இல்லை' என்று கோபம் வருகிறது. சீக்கிய நண்பர்களைச் சந்திக்கவே அலுப்பு ஏற்பட்டது. ஆனால் ஹிந்து நண்பர்களுடன் முன்பு போல் சகஜமாகப் பேச முடியவில்லை. முன்பு மாதிரி அசிங்க ஜோக்குகளைச் சொல்லித் தொடையில் தட்டி அட்டகாஸமாய்ச் சிரிக்க முடியவில்லை.

ஒரு வித்தியாசம் ஏற்பட்டுவிட்டது. இடையில் ஒரு சுவர் எழும்பிவிட்டது.

இந்த நிலை மாறுமா?

விஸ்கி கிளாசைக் கையில் பிடித்து வெறித்துப் பார்க்கையில் அதில் அவருடைய உருவம் சிறியதாய்த் தெரிகிறது.

"இந்த நிலைமைக்கு நீயும் பொறுப்பு" என்றார் அவர் அதைப் பார்த்து.

'வாயைத் திறக்க வேண்டிய சமயத்தில் மௌனம் சாதித்த ஒவ்வொரு பொறுப்புள்ள சீக்கியனும் பொறுப்பு'. ஆனால் இந்தக் குற்றத்தை எந்த சீக்கியனும் பகிரங்கமாக ஒப்புக் கொள்ளப் போவதில்லை. என்னாலும் முடியாது. எனக்கு அந்த முகமூடி அவசியம். என் கூட்டத்திற்குள்ளாவது நான் நிம்மதியுடன் வளைய வரவேண்டிய அவசியத்துக்கு..

இது ஓர் அரசியல் பிரச்னை. அரசியல்வாதிகள்தான் நிலைமையைச் சீர் செய்ய வேண்டும். தீர்க்க தரிசனம் கொண்ட அரசியல்வாதிகள்.

இருக்கிறார்களா? அல்லது உருவாவார்களா?

மனத்தில் ஒரு கவிதை ஜனிக்க ஆரம்பிக்கையில் கதவு படீரென்று திறந்தது. அவர் அரண்டு கண்களைத் திறந்தார். ரூபா நின்றிருந்தாள்.

"அந்தப் பெண் வந்திருக்கிறான்" என்றாள்.

புலன்கள் சட்டென்று விழித்துக் கொண்டன.

"எந்தப் பெண்?"

"அதான் அந்த மதராஸிப் பெண்!"

கண்கள் நன்றாக மலர்ந்தன.

"தனியாகவா?"

"இல்லை. ஒரு இளைஞனும் கூட இருக்கிறான்."

"வரச் சொல்!" என்றார் அவர் உற்சாகம் வடிந்த குரலில்.

(தொடரும்)

# உங்களுக்குத் தேவை இவைதான்:
# சாந்தமுள்ள மனநிம்மதி
# சக்தியுள்ள உணவுகள்.



ஆம். குழந்தைக்கு பாலூட்டத் தயாராகும் நீங்கள் கவனத்தில்கொள்ள வேண்டியது மிக எளிய விஷயம்; மன நிம்மதியோடு பாலூட்டுங்கள். அதிகமாக பால் சுரப்பதற்கு உதவிடும் உணவுகள் அனைத்தையும் உண்ணுங்கள்.

### கவலைப்படுவதை நிறுத்துங்கள்

கவலைப்படுவது உங்களுக்குத் தீங்கு விளைவிக்கும்—என்றால், உங்கள் குழந்தைக்கும்தான். கவலைப்படுவதால் உங்களுக்கு நோய் ஏற்பட்டு பால் வற்றிவிடும்.

நோய்ப் பிரச்சனைகள் எதுவும் உங்களுக்கு இருந்தால், அலட்சியமாய் இருந்து விடாதீர்கள்; டாக்டரிடம் செல்லுங்கள் அவரை உங்கள் மூத்த நண்பராய்க் கருதுங்கள்.

### ஆரோக்கியமான உணவைத் துவக்குங்கள்:

உடலுக்கு உகந்த ஆரோக்கிய உணவு எது என்பதை அறிந்திட பிரமாதமாக நூல் நிலையத்திற்குச் சென்று புத்தகங்களைப் புரட்டுவதோ, கலோரிப் பட்டியலைப் பார்ப்பதோ அவசியமில்லை. உங்களுக்குத் தேவை பொது அறிவுதான். உதாரணமாக, குழந்தையின் வளர்ச்சிக்கு புரதம் அதிக அளவில் தேவைப்பட்டால் அதை வழங்கக்கூடியவை, உடல் வளர்ச்சியை உருவாக்கும் பால், முட்டை, மாமிசம் ஆகும். அவற்றை நீங்கள் உண்ண வேண்டும்; புரதம் செறிந்த உணவுப் பானங்களை அருந்த வேண்டும். புரதச்சத்தை அதிக அளவில் நீங்கள் பெறுவது, உங்கள் குழந்தையும் பெறுவதாகும்—உங்களிடமிருந்து. மிகவும் முக்கியம் என்னவென்றால் கார்போஹைட்ரேட்டுகள் அதிகம் கூடாது. காரணம் அது பாலின் தரம் மற்றும் அளவைப் பாதிக்கும்.

இதுபோன்ற எளிய நடவடிக்கைகள்கூட, உங்கள் குழந்தை முறையாக முலைப்பால் குடித்திட உதவும். உடல் நிலை மோசமாக பாதிக்கப்பட்டிருக்கும் பட்சத்தில் உங்கள் குழந்தைக்கு நீங்கள் மாற்றுப்பால் தேர்ந்தெடுக்க வேண்டும்.

### ஸ்ப்ரே ட்ரை செய்யப்பட்ட அமுல்ஸ்ப்ரே

அமுல்ஸ்ப்ரே-நன்கு சமச்சீராக கலக்கப்பட்ட சத்துக்களுடன் கூடியது—பிரதம தரமுள்ள புரதம், ஜீரணிக்க எளிதான கொழுப்பு மற்றும் கார்போ ஹைட்ரேட்டுகள், சரியாகக் கலந்துள்ள வைட்டமின்கள் மற்றும் தாதுக்கள்.

ஏற்கனவே கொதிக்க வைத்த வெது வெதுப்பான நீரில் அதைக் கலப்பது எளிது. முன்னாலேயே அதை பசைபோல் தயாரிக்கவேண்டிய அவசியம் இல்லை.

### சிக்கனமானது

டின்னில் அடைக்கப்பட்டுள்ள குழந்தை உணவுகளில் மிகவும் சிக்கனமானது, அமுல் ஸ்ப்ரே. காரணம், அது இந்தியாவின் 'வெண்மைப் புரட்சிக்கு' முன்னோடியான நவீன பால் நிறுவனத்தால் தயாரிக்கப்பட்டது.

ஆனால் கொதிக்க வைத்த நீர், சுகாதார முறையில் கிருமி நீக்கம் செய்யப்பட்ட பாத்திரங்கள் மற்றும் பால் புட்டிகள் உபயோகித்தலை உறுதி செய்து கொள்ளுங்கள். பால் கலக்கப்படும்போது அதிகம் நீராகி விடுவதை தவிர்ப்பதற்கும், போதுமான ஊட்டச் சத்துக்களை உறுதி செய்வதற்கும் டின்மீது குறிப்பிட்டுள்ள வழிமுறைகளை கவனமாக பின்பற்றுக.




# அமுல்ஸ்ப்ரே

**தாய்ப்பாலுக்கு அடுத்ததுதான்.**

### இலவசம்! அமுல் வளர்ப்பு வழி—

இதில் அடங்கியுள்ளவை: கருத்தரித்தல்,
பேறு காலத்திற்கு முன் கவனிப்பு,
பிரசவம், தாய்ப்பால் ஊட்டுதல்,
வெளியில் கிடைக்கும் உணவு வகைகள்,
லேசான தானிய உணவு தருதல்,
குழந்தையின் அன்றாடக் கடன்கள்,
குழந்தையின் வளர்ச்சி, நோய்த் தடுப்பு,
முதலுதவி, பொதுவான நோய்கள்,
நோயுற்ற குழந்தையைப் பாதுகாத்தல்
தமிழ், இந்தி, மராத்தி, குஜராத்தி,
ஆங்கிலம், தெலுங்கு மற்றும் மலையாள
மொழிகளில்.

உங்கள் பெயர் மற்றும் முகவரியுடன்
ரூ. 1.25 தபால் தலை ஒட்டி எழுதுக
இம் முகவரிக்கு: தபால் பெட்டி
எண் 10124, பம்பாய் 400 001.

விற்பனைக்கு விடுப்போர்:
குஜராத் கோ-ஆப்பரேடிவ் மில்க் மார்க்கெட்டிங் ஃபெடரேஷன் லிமிடெட்,
தபால் பெட்டி எண் 10, ஆனந்த் 388 001, குஜராத் மாநிலம்.

ASP/AS-TAM7/83

# பூவுலகில்







## உதவியில் சொர்க்கம்

தண்ணீர்ப் பஞ்சத்தின்போது, என் வீட்டு வாசலில் ஒரு நீண்ட கியூ நிற்கும். ஒவ்வொருவராக உள்ளே வந்து தண்ணீர் எடுத்துச் செல்லும் போது, ''இத்தனை பேருக்குத் தண்ணீர் கொடுக்கும் வாய்ப்பு நமக்கு இருக்கிறதே'' என்று என் வீட்டைச் சொர்க்கமாகக் கருதினேன்.

சாந்தா ராஜகோபாலன், சென்னை—4.

## மகனால் சொர்க்கம்

ஒருமுறை ஆபீஸ் பிரச்னையால் சோர்ந்து போய்த் தள்ளாடி வீட்டுக்கு வந்தேன். வழக்கமாகப் பாய்ந்து வந்து கட்டிக் கொண்டு கொஞ்சி, ஏதாவது கேட்டுத் துளைக்கும் என் மூன்று வயது மகன் அன்று என்னைத் தடவி, ''உடம்பு சரியில்லையா அப்பா! படுத்துக்கோ! போய்க் காப்பி வாங்கிண்டு வரேன்!'' என்றதும் கவலைகளையெல்லாம் மறந்து, ''இதுவல்லவோ சொர்க்கம்!'' என்று அவனை வாரி அணைத்துக் கொண்டேன்.

எஸ். ராமநாதன், திருநெல்வேலி—11.

## எதிர்பாராமல் சொர்க்கம்

எனக்குத் தலைப்பிரசவமாகிக் குழந்தையுடன் புகுந்த வீட்டுக்குச் சென்ற சமயம் அது. என் மாமியார் இறந்துவிட்ட காரணத்தினால் பெரியவர்களின் துணையும் இல்லாமல், எப்படிக் குழந்தையையும் பார்த்துக் கொண்டு, தொடர்ந்து சில மாதங்களாகப் பூட்டப்பட்டிருந்த வீட்டைச் சுத்தம் செய்து பழைய நிலைக்குக் கொண்டு வருவது என்று நான் பயந்து கொண்டே சென்ற போது என் கணவரே வீட்டைச் சுத்தப்படுத்திக் குழந்தைக்காகத் தொட்டில் முதற்கொண்டு அனைத்தையும் தயாராய் வைத்திருந்ததைக் கண்ட போது... சொர்க்கமே என் காலடியில் கிடப்பது போல் உணர்ந்தேன்!

சில்வியா துரை, திருச்சி—2.

## சொர்க்கத்தை விடவும் ஒரு சுகம்

நான் விரும்பி ஏற்றுக் கொண்ட என் கணவர் மிக நல்லவர். ஆனால் பேசும் திறன் இழந்த பிறவி ஊமை. எங்களுக்குப் பிறந்த குழந்தையும் இரண்டாண்டுகளாகப் பேசாமல் இருக்கவே எனக்குச் சொல்ல முடியாத துயரமாகிவிட்டது. இந்த நிலையில் என் குழந்தையின் மூன்றாவது பிறந்த நாள் அன்று திடீரென்று அவன் முதன் முதலில் பேசிய போது சொர்க்கத்திலிருப்பதை விடவும் சுகமாகிப் போனேன் நான்.

ஆர். விஜயலட்சுமி, சென்னை—86.

## சொர்க்கமான மாட்டுக் கொட்டில்

ஒரு சமயம் இளையாற்றங்குடிக்குச் செல்லும் வழியில் ஸ்ரீ காஞ்சிப் பெரியவர் அவர்கள் மன்னார்குடியில் முகாமிட்டிருந்தபோது,

**வாசகர் பங்கு**



எங்கள் அழைப்பிற்கு இணங்கி எங்கள் குடிலுக்கு விஜயம் செய்து, பூஜையறையிலிருந்த காமாட்சியம்மன் படத்திற்குக் குங்கும அர்ச்சனை செய்துவிட்டு மாட்டுக் கொட்டிலில் போய் அமர்ந்து கொண்டாரே... அந்தக் கணங்களைத்தான் சொர்க்கமாகக் கருதுகிறேன்.

ஜி. நீலா, மன்னார்குடி.

### மாடியில் ஒரு சொர்க்கம்



இளமை முதலே, தெற்குப் பார்த்த வீடு கட்டி, அதில் முன்புறம் ஜன்னல்கள் அமைந்த மாடி கட்டி அந்த மாடியில் யோகாசனம் பயில வேண்டுமென எண்ணி வந்தேன். அந்த எண்ணம் இந்த ஐம்பத்தெட்டாவது வயதில்தான் ஈடேறியது. 14.7.85 அன்று காலை மான் தோலை விரித்து அதில் வரிசைப் படி நான் யோகாசனம் செய்ய ஆரம்பித்த போதுதான் சொர்க்கத்தின் இன்பத்தை உணர ஆரம்பித்தேன்!

பு. பா. ராமானுஜம், வேலூர்—9.

### தவித்துக் கிடைத்த ஒரு சொர்க்கம்



இராணுவத்தில் பணிபுரிந்த என் கணவர் நெருங்கிய உறவினர் ஒருவரின் திருமணத்திற்காக வர இருந்தார். அந்தச் சமயம் பார்த்துப் பங்களாதேஷ் போர் வந்துவிட்டது. கணவரைப் பார்த்து இரண்டு ஆண்டுகள் ஆகிவிட்ட பிரிவும், போரின் மும்முரமும் மனத்தைப் போட்டுக் குழப்பிக் கொண்டே இருந்தது. அந்த நேரத்தில் எந்தவிதமான முன்னறிவிப்பும் இன்றித் திடீரென்று என் கணவர் வீட்டுக்கு வந்தபோதுதான் வீடே சொர்க்கமானதாய் உணர்ந்தேன்.

என். ஜெயகுமாரி, பார்வதிபுரம்
வடலூர்.

### வாராது போல்வந்த சொர்க்கம்!

எங்களுக்குத் திருமணமாகி ஆறு ஆண்டுகளாகியும் குழந்தை பிறக்காததால் உற்றார் உறவினரின் அவச் சொற்களைக் கேட்டுக் கேட்டுக் கண்ணீர் விடாத நாளே இல்லை. பெங்களூரில் மிகப் பிரபலமான லேடி டாக்டர்கூட எனக்குக் குழந்தை பெறும் வாய்ப்பு இல்லையென்று கூறிவிட்டார். இந்த நிலையில் அடுத்த ஆண்டே நான் கருவுற்று ஓர் அழகான ஆண் குழந்தைக்குத் தாயாகி என் கணவருடன் வீட்டுக்குச் சென்ற நாள்தான் எனக்குச் சொர்க்கத்திற்கு நிகரான நாள்.

— மைதிலி ஸ்ரீனிவாசன், பெங்களூர்—11

# ஒரு சொர்க்கம்

### குறும்புச் சிரிப்பிலும் சொர்க்கம்!

இரவில் வீட்டு வேலைகளையெல்லாம் முடித்துவிட்டு நான் 'அப்பாடா' என்று உட்காரும்போது, 'நான்தான் அம்மா பக்கத்தில் படுப்பேன்' என்று என் ஐந்து வயது மகள் கழுத்தைக் கட்டிக் கொள்ள, என் இரண்டு வயது மகள் 'நானு அம்மா பின்னே'

என்று மழலையில் கூறி என் மடியில் படுத்துக் கொள்ள, 'நான்தான் உங்க அம்மா பக்கத்தில் படுப்பேன்' என்று என் கணவர் குறும்புச் சிரிப்புடன் கூற அப்பப்பா.... பூவுலகில் ஒரு சொர்க்கம் என்பது எனக்கு அந்தச் சந்தர்ப்பம்தான்!

— பிச்சைமணி ரெங்கன், மதுரை—7.

### புத்தகங்களே சொர்க்கம்

ஒருவனுக்கு விருப்பமான எல்லா வசதிகளும் பொருள்களும் எங்கு கிடைக்கிறதோ அவ்விடமே அவருக்குச் சொர்க்கமாகிறது. புத்தகப் புழுவான எனக்கு என் விருப்பத்திற்கேற்ற புத்தகங்களும் அமைதியான சூழ்நிலையும் நிரம்பிய இல்லம் கிடைத்தது. மாலை வேளைகளில் எனது வீட்டின் முன்புறமுள்ள சிறிய தோட்டத்தில் கையில் புத்தகமும் கொறிப்பதற்குச் சிறிது தின்பண்டங்களும் பெற்ற நேரங்கள் தான் நான் சொர்க்கமாகக் கருதும் நேரங்கள்.

— பி. அஸ்வின், சென்னை—78.

### வீடுதான் சொர்க்கம்

'காட்டில் போர்முறை' என்பது பற்றிப் பீஹார்க் காட்டில் எனக்கு எட்டு வாரக் கடும் பயிற்சி. சரியான குளிர்காலத்தில் போய்ச் சேர்ந்தேன். தங்குவதற்கு ஒரு கிழிசல் கூடாரம்! பயிற்சி மாணவர் தலைவனை எனக்கு அவர்களையெல்லாம் கட்டி மேய்க்கும் பொறுப்பு வேறு. அந்தக் குளிரிலும் காலை நான்கு மணிக்கே எழுந்து வேலைகளைத் துவங்கிவிட வேண்டும். சாப்பாடும் சரியானது என்று சொல்லிவிட முடியாது. ஒரே நரகவாசம்தான்! பயிற்சி முடிந்து வீட்டுக்கு வந்து மனைவி, குழந்தைகளுடன் விருந்துண்டபோதுதான் வீடே சொர்க்கமானதாக உணர்ந்தேன்.

— வி. வெங்கட்ராமன், நியூடெல்லி—23.

### ஆண்டுதோறும் சொர்க்கம்

ஒவ்வோர் ஆண்டும் நவராத்திரி தினங்களில் எங்கள் வீட்டில் கொலு வைப்பது வழக்கம். அந்த ஒன்பது தினங்களிலும், தெய்வ வடிவங்களான பொம்மைகளைப் பார்க்கும்போது எனக்குச் சொர்க்க லோகத்தில் எல்லாக் கடவுளர்களுடன் நிற்பதாகத் தோன்றும். மெய்மறந்து பார்த்துக்கொண்டே இருப்பேன்.

— சுப்புலெட்சுமி, காரைக்குடி—1.

### குழந்தைகள் காட்டும் சொர்க்கம்

இரவுச் சாப்பாட்டின்போது என் கணவரும் குழந்தைகளும் செய்யும் கலாட்டா இருக்கிறதே அதைச் சொல்லி மாளாது. தனது கல்லூரிக் குறும்புகளை என் கணவர் சொல்ல, என் பெரிய பெண் அன்றன்று தன் கல்லூரி நிகழ்ச்சிகளை நடிப்போடு விளக்க, சிறியவள் தன் பள்ளியில் நடந்ததைப் பல்வேறு குரலில் மாற்றி மாற்றிச் சொல்ல, இவர்களுக்கு நடுவில் என் மகன் கமெண்ட் அடிக்க.... இத்தனை ஊட்டிகளோடு எங்களது சாப்பாட்டு நேரம் இரண்டு மணி நேரங்கள் கூட நீடிக்கும். இந்த நேரமெல்லாம் எனக்குச் சொர்க்கம்தான்!

— திருமதி சந்தானம், சென்னை—35.

### சொந்த வீடே சொர்க்கம்

வாடகை வீட்டிலேயே கட்டுப்பாடாக இருந்த எங்களுக்கு, இப்போது சொந்த வீட்டில், நாங்களே பயிர் செய்து பூத்திருக்கும் மலர்களைக் காலையில் குளித்தவுடன் பறித்து வந்து கடவுள் படங்களுக்குச் சூட்டி, அழகு பார்க்கும்போது கிடைக்கும் ஆனந்தப் பரவசத்திற்கு ஈடாக வேறோர் சொர்க்கம் இருக்க முடியுமா என்ன?

— ஏ. முகேஷ், கருமாரம்பாளையம் (கோவை).

### மருமகளோடு வந்த சொர்க்கம்

நற்பண்புகள் உடைய என் மகனுக்கேற்ற ஆதர்ச மனைவி பற்றிய கனவை நனவாக்கி, என் நாட்டுப் பெண்ணையும், பிள்ளையையும் ஆரத்தி சுற்றி வரவேற்று — அந்தப் பெண் தனது வலது காலை எடுத்து வைத்து எங்கள் வீட்டுக்குள் வந்து எங்களை நமஸ்கரித்த அந்த நிமிடத்தை நான் சொர்க்கத்திற்கு நிகராகக் கருதினேன்!

திருமதி ராஜன், பம்பாய்—54.



புளோப்ளாஸ்ட் நிறுவனம் வழங்கும் வி.ஐ.பி. ஸூட் கேஸைப் பரிசாகப் பெறுபவர்:

பிச்சை மணி ரெங்கன்,
49 C, மண்மலை மேடு,
கே. புதூர்,
மதுரை—625 007.

# saravana investments

## FIXED DEPOSIT SCHEME

Saravana Sound offer makes your Fixed Deposit Grow Safer and Stronger. A Group Holding Company - Pioneers in the Field of Textiles - for more than three Decades - total assets Exceeds Rs. 20 crores.

| | |
|---|---|
| **ONE YEAR** | **18%** |
| **TWO YEARS** | **19%** |
| **THREE YEARS** | **20%** |

## SARAVANA SPECIAL DEPOSIT SCHEME

**DOUBLE YOUR MONEY IN JUST FOUR YEARS.**

Deposits Accepted in Multiples of Rs. 500 Subject to a Minimum of Rs. 1000/- Interest Payable Quarterly or Half Yearly. Monthly Interest on Rs. 5000/- and Above.

*WE CARE FOR YOUR INTEREST*

For Applications and Brochures

**MADRAS**

saravana investments

Jhaver Plaza, First Floor 1-A Nungambakkam High Road Madras-600 034

Phone : 478797 & 475609 Telex : 041 - 7799 Lxmi in

**RAJAPALAYAM**

saravana investments

ACM Guest House
Kumarasamy Raja Nagar
Rajapalayam - 626 108
Phone : 2305 & 2107
Telex : 442 - 207 ACM in

**KOMARAPALAYAM**

saravana investments

Annai Illam Salem Main Road
Komarapalayam - 638 183
Erode R.M.S.
Phone : 625 & 308 (Bhavani Exch)
Telex : 856 - 243 KSM in

அந்தப் போர்டைப் பார்த்ததும் சடாரென்று ப்ரேக்கை அழுத்தினேன். முன்னேறிக் கொண்டிருந்த ஊஞ்சலை இரண்டு ராட்சதக் கரங்கள் திடீரென்று பிடித்து நிறுத்தின மாதிரி கார் ஒரு பெரிய குலுங்கலுடன் நின்றது.

மாலதி டாஷ் போர்டில் இடித்துக் கொள்ளாத குறை.

எனக்குள் ரத்தம் கொதித்துக் கொண்டிருந்தது.

"போர்டைப்பார்". என்றேன்.

மாலதி குழப்பக் கண்களுடன் போர்டைப் பார்த்தாள்.

'நவநீத கிருஷ்ணன், ரிட்டயர்ட் டெக்னிகல் அட்வைஸர், மாரீசன் கம்பெனி' என்றிருந்தது.

"அவனா? அவனேதானா?" என்றாள்.

"அந்த நாசகாரப்பாவிதான்" என்றேன்.

"அவனுக்கும் இந்த இடத்திற்கும் என்ன சம்பந்தம்? இங்கே எப்படி வந்தான்?" என்றாள் மாலதி.

"அதுதான் எனக்கும் புரியவில்லை. முதலில் நாம் கோயிலுக்குப் போய்ட்டு வந்துடுவோம். அதற்கப்புறம் இந்த வீட்டில் நுழைந்து அவனாகவே இருந்தால் "தூ" என்று காறி உமிழ்ந்து விட்டுப் போவோம்" என்றேன்.

* * * * *

மாரீசன் கம்பெனி சுறுசுறுப்பாக இயங்கிக் கொண்டிருந்தது.

எம். டி. சேர்மன் என்று அட்டகாசமாய் ஆங்கிலத்தில் சொல்வதையெல்லாம் எளிமையான தமிழில் சொன்னால் முதலாளி. முதலாளி ஒரு வடக்கத்திக்காரர். இருபது வருஷங்கள் இந்தச் சென்னையிலேயே இருந்துங்கூட தமிழைத் தெரிந்துகொள்ளப் பிரியப்படாதவர். ஆனால் மனிதர் எடுப்பார் கைப்பிள்ளை. சரியாய் ஆராயாமலேயே சட்டென்று தீர்ப்புச் சொல்கிற தேரா பாண்டிய மன்னர்.

அப்படிப்பட்ட முதலாளியின் கீழ்தான் படிப்பை முடித்தவுடன் நான் வேலைக்குச் சேர்ந்திருந்தேன். சேர்ந்து ஆறு மாதம் ஓடிப்போனதே தெரியவில்லை. நான் உண்டு. என் டெக்னிகல் டிபார்ட்மெண்ட் உண்டு. என் சூபர்வைசர் நவநீத கிருஷ்ணன் உண்டு. நவநீத கிருஷ்ணனைப் பார்த்ததில்லையே நீங்கள். மனிதருக்கு ஐம்பத்திரண்டு வயதோ என்னவோ. க்ரு கட் பண்ணியிருப்பார். தலையில் பழங்கால நினைவாகக்கூட ஒரு கறுப்பு முடியைக் காண முடியாது. முகத்தில் எப்போதும் ஒரு கடுவன் பூனை உட்கார்ந்திருக்கும். நெற்றியில் முடிச்சு முடிச்சாகக் கேள்விச் சுருக்கங்கள். இடுங்கிய கண்களில் நிரந்தரமாகச் சந்தேக அம்புகள். யாரைப் பார்த்தாலும் அந்த அம்புகள் பாய்ந்து கொண்டே இருக்கும்.

அவருக்கு நேர்கீழே நான்.

வேலைக்குச் சேர்ந்த ஆறுமாதத்தில் எக்கச்சக்கமாய் இடறிவிட்டார் மனிதர். எந்தப் பாதையில் போனாலும் அவர் கால் இடறிவிடத் தயாராய் இருக்கும். ஆறு மாதம் ஓடிப்



# நறுக் கென்று நாலு வார்த்தை

## சுபா

போனதே தெரியவில்லை என்று சொன்னது வேறு பல காரணங்களால். வீட்டில் ஏக சந்தோஷம். 'நம்ப ராஜா வேலைக்குப் போறான்,கைநிறையசம்பாதிக்கிறான்' என்று அம்மா அப்பாவைச் சாவி கொடுக்க ஆரம்பித்து மூன்றும் மாதமே மாலதியின் கையைப் பிடித்து அழைத்து வந்து எனக்குப் பக்கத்தில் மணையில் உட்கார வைத்து விட்டார்கள். கல்யாணம், காட்சி, புது மனைவி, தேனிலவு என்று எனக்கு நாட்கள் ஓடினதே தெரியவில்லை. இதில் லீவு கொடுக்க மாட்டேன் என்று நவநீத கிருஷ்ணன் ஒரு தரம் குறுக்கில் படுத்துப் பார்த்தார். நான் ஒரே தர்வாசுத் தாவி வந்துவிட்டேன். 'லாஸ் ஆஃப் பே' என்றால்கூட பரவாயில்லை. எனக்கு இந்தச் சமயத்தில் லீவு அவசியம் என்று பறந்துவிட்டேன்.

மனிதருக்கு என்மேல் அந்தக் காழ்ப்பும் கூட போயிருக்கிறது. அன்றைக்குக் கம்பெனி உள்ளே நுழைந்தவுடனேயே எனக்கு அழைப்பு வந்தது. எம். டி. கூப்பிடுவதாக. ஒரு சந்தேகமும் இல்லாமல், ஒரு நடுக்கமும் இல்லாமல், ஒரு பயமும் இல்லாமல் உள்ளே போனேன்.

முதலாளி ஏ. ஸி. ரூமில் சுழல் நாற்காலியில் உட்கார்ந்திருந்தார். வழுக்கைத் தலையில் வியர்வை தெரிந்தது. கன்னத்தில் அளவுக்கு மீறிய சதை தொங்கிக் கொண்டிருந்தது. தொப்பை போட்ட வயிறு மேஜை முனையைத் தொட்டுக் கொண்டிருந்தது.

'ஆவோ, ராஜசேகர், பைடோ' என்றார் ஆணையிடுகிற மாதிரி. எதிரில் போய் உட்கார்ந்தேன். முதலாளிக்குப் பக்கத்தில் நவநீத கிருஷ்ணன் நின்றிருந்தார். கையில் என் ப்ராஜக்ட் ரிப்போர்ட் ஃபைல் இருந்தது.

எங்கள் கம்பெனி என்ன செய்கிறது என்று சொல்லவில்லையே. மக்களுக்கு உதவுகிற முறையில் ஏதாவது ஒரு புது சாதனத்தைக் கண்டுபிடிக்க வேண்டியது. சின்னதாய் இருந்தாலும் சரி, பெரிதாய் இருந்தாலும் சரி.



அதற்கு அரசிடம் அனுமதி கேட்டுப்பெற்றுச் சாதனங்களை உற்பத்தி செய்து மக்களுக்கு விற்பது.

இந்த மாதிரி நிறையச் சில்லறை விஷயங்களை ஏற்கெனவே மாரீசன் கம்பெனி புழக்கத்தில் விட்டிருந்தது. அதில் வந்து சேர்ந்த ஆறு மாதத்தில் நானும் இரண்டு மூன்று டிசைன்களைச் செய்து கொடுத்தேன். மார்க்கெட்டில் நல்ல பேர். உற்பத்தி ஆக ஆக விற்றுக் கொண்டேயிருந்தது. மாரீசன் சைஃபன் இருக்கிறதா, மாரீசன் டிரான்ஸ்ஃபார்மர் இருக்கிறதா என்றுதான் மார்க்கெட்டில் கேள்வி. இரண்டும் ஐயாவின் மூளையில் உருவானது. அந்த கித்தாய்ப்புடனேயே உள்ளே போய் உட்கார்ந்தவனுக்கு முதலாளியின் குரல் அதிர்ச்சியைக் கிளப்பி விட்டது. என்ன தப்பு பண்ணினேன் என்று கணக்குப் போட்டுப் பார்த்தேன். எனக்குத் தெரிந்து எதுவுமில்லை.

நவநீத கிருஷ்ணன்தான் முதலில் ஆரம்பித்தார். பற்ற வைத்தார் என்று பின்னால்தான் தெரிந்தது.

''மிஸ்டர் ராஜசேகரன், நீங்கள் புதுசாய்க் கண்டு பிடித்திருக்கிறீர்களே ஒரு காஸ் இண்டிகேட்டர்.பேடண்ட் வேண்டுமென்று அப்ளை பண்ணச் சொல்லி இருக்கிறீர்களே, எந்த தைரியத்தில் சொல்கிறீர்கள்?''

''ஏன் சார்?'' என்றுபுரியாமல்கேட்டேன்.

''காஸ் தீர்ந்து போனால் 'பீப்பீ' என்று சத்தம் போடும்; காஸ் இருக்கிற சமயத்தில் மஞ்சள் விளக்கு எரியும். தீர்ந்து போனவுடன் சிகப்பு விளக்கு எரியும் என்று சொல்கிறீர்கள். எல்லாம் சரி. இந்த இண்டிகேட்டரைப் பொருத்துவதால் காஸ் லீக்காவதற்கு சான்ஸ் இருக்கிறதே. அதைக் கோட்டை விட்டு விட்டீர்களே'' என்றார்.

''சார்....'' என்றேன் திகைத்துப் போய். ஏற்கெனவே அது பற்றி நவநீத கிருஷ்ணனிடம் பேசி, காஸ் எதனால் லீக்காகாது என்று விளக்கி இருக்கிறேன். இருந்தும் இந்த மனிதர் கேட்டால்?

''பேசாதே மேன். காஸ் லீக்காகி ஆக்ஸிடெண்ட் ஆச்சின்னா கம்பெனி பேரே ரிப்பேராகி இருக்கும். நல்ல நேரத்தில் நம்ப நவ்நீத் சொல்லிச்சு. நான் அப்ளை பண்ணாம வுட்டுட்டேன்! நவ்நீத்.... நீ ஒண்ணு, செய் ராஜசேகர் கணக்கு சப்ஜாடாப் பார்த்து ஃபைசல் பண்ணி ஊட்டுக்கு அனுப்பிடு. நம்பள்கு இந்த மாதிரி நமக்ஹாராம் ஆத்மீ வேணாம்.''

முதலாளி அப்படிச் சொன்னவுடன் அப்படியே அதே இடத்தில் மயங்கி விழுந்தவன்தான். இரண்டாயிரம்ரூபாய்சம்பளம் அவுட். என்னை நம்பி வீட்டில் எத்தனை ஜீவன்கள். பற்றும் பற்றாததற்கு மாலதி வேறு.

யாரோ ஒரு ப்யூன் முகத்தில் தண்ணீர் அடித்து என்னை எழுப்பிவிட்டான். யாரோ என் கையில் ஒரு கவரைத் திணித்தார்கள். நான் அவிழ்ந்து போன டையுடன், கசங்கிப் போன சட்டையுடன், தொய்ந்துபோன நடையுடன் வெளியே வந்தேன். என் கையில் ஒரு மெஷின் கன் இருந்திருந்தால் நவநீத கிருஷ்ணனைச் சல்லடையாகத் துளைத்திருப்பேன்.

* * * * *

கோயிலுக்குச் சென்று திரும்பும்போது மறுபடியும் அந்த போர்டு வீட்டு வாசலில் நின்றேன். உடம்பில் பதற்றம் கொஞ்சம் குறைந்திருந்தது. சூழ்நிலைதான் காரணம். அந்த அமைதியான இயற்கைச் சூழலில், குளிர் காற்றில் மனம் கோப தாபங்களை எல்லாம் மறந்துவிடத் தயாராய் இருந்தது.

காலிங் பெல்லை அழுத்தினேன்.

''யாருஊஊ?'' என்று உள்ளேயிருந்து இழுத்த பெண் குரல் கேட்டது. 'லொடக்' என்று கதவுத்தாழ் சத்தமிட்டது. திறந்தது.

ஒருவயதான அம்மாள். நடையில் பரவின வெளிச்சத்தில் அந்த அம்மாளின் முகம் பக்கவாட்டில் தெரிந்தது. மங்களகரமான மஞ்சள் முகம்.

''மிஸ்டர் நவநீத கிருஷ்ணன்?'' என்று கேள்வியுடன் அந்த அம்மாளின் முகத்தைப் பார்த்தேன் நான்.

''இந்த வீடுதான். உள்ளே வாங்கோ!'' என்று அகலமாய்க் கதவைத் திறந்து ஒதுங்கி நின்று கொண்டாள்.

ஒரு பாதி ஹாலில் சோஃபா, நாற்காலி எல்லாம் போட்டிருந்தது.

மற்றொரு பாதி ஹாலில் ஊஞ்சல் லேசாக ஆடிக் கொண்டிருந்தது. ஊஞ்சலில் படுத்திருந்த பெரியவர் எழுந்து உட்கார்ந்தார்.

நான் மூச்சை இழுத்துப் பிடித்துக்கொண்டேன். அதேநவநீதகிருஷ்ணன்தான். எப்படி இருந்த மனிதர்?

அந்த வெள்ளை முடிதான் அவரை நவநீத கிருஷ்ணன் என்று காட்டிக் கொடுத்தது. மற்றபடி கன்னங்கள் ஒட்டிப் போயிருக்க, மார்பு எலும்புகளும், விலா எலும்புகளும் துருத்திக் கொண்டு தெரிய முற்றின காச நோயாளி மாதிரி தெரிந்தார்.

மனிதருக்குக் கண் பார்வையில் ஒரு குறையும் இல்லை என்று அவருடைய முதல் வார்த்தையிலேயே தெரிந்து போயிற்று.

''ராஜசேகரனா?''

ஒரு கணத்திற்கு எல்லா வன்மத்தையும் மறந்துபோய் ரொம்ப சாதுவாக 'ஆமாம்' என்றேன்.

''வாப்பா, வா, வா, இது அப்போ மாலதியா? மாலதிதான் மாறிப் போயிட்டா.

---

மானேஜர்: "Dear Sir"க்குப் பதிலா "Deaf Sir"னு டைப் பண்ணியிருக்கீங்களே!''

டைப்பிஸ்ட்: ''நாது ரிமைண்டர்''

போட்டப்புறமும் பதிலெழுதலே ஸார், அந்த ஆளு: அதான் Deaf Sirனு டைப் பண்ணியிருக்கேன்!''

— என். ஜி. நடராஜன்.

# அருள் வாக்கு



பிரபஞ்சத்தில் நவக்ரஹங்களின் ஸ்திதிகளைப் போலவே மனிதர்களுடைய ஸ்திதியும் மாறிக் கொண்டே வருகிறது. கஷ்டம், சௌக்கியம், துக்கம், ஸந்தோஷம், உன்னத பதவி, தாழ்ந்த பதவி என்று இப்படி எல்லோருடைய ஸ்திதியும் மாறி வருகிறது. இப்படி மாறிக் கொண்டே இருப்பவன் மனிதன் மட்டும் அல்லன். ஸ்தாபனங்களுக்கும் அப்படியே. தேசங்களுக்கும் உயர்ந்த காலம், தாழ்ந்த காலம் என்று வருகிறது.

லோகத்தில் நடக்கும் சுக துக்கங்களுக்கும் கிரஹங்களுக்கும் சம்பந்தம் உண்டென்று கண்டு, மஹரிஷிகள் இன்ன இன்ன மாதிரி கிரஹங்கள் இருந்தால் இன்ன இன்ன பலன் கிடைக்கும் என்று சொல்லியிருக்கிறார்கள். ஒரு காரியம் ஆரம்பித்தால், அதன் ஆரம்ப கால கிரஹ ரீதிகளைக் கொண்டு மேலே நடக்கும் சுகதுக்கப் பலன்களைச் சொல்லும் பாகத்திற்கு "ஹோராஸ்கந்தம்" என்று பெயர். ஜனன காலத்தை ஆரம்பமாக வைத்துக் கொண்டு ஜாதகம் கணித்து வாழ்நாள் முழுவதற்கும் சுக துக்க பலன்களைச் சொல்லிவிடலாம்.

சுக துக்க பலன்களுக்குக் காரணம் பல விதமாகச் சொல்லப்படுகிறது. இது ஒரே வியாதிக்குப் பல பேர் பல காரணம் சொல்கிற மாதிரிதான். வைத்தியர்கள் தாது வித்தியாசத்தால் இந்த வியாதி உண்டாயிற்றென்று சொல்லுவார்கள். மந்திரவாதி தெய்வக் கோளாறு ஏற்பட்டிருக்கிறது என்று சொல்லுகிறான். ஜ்யோதிஷன் கிரஹகதியால் அது வந்தது என்கிறான். தர்ம சாஸ்திரம், பூர்வ கர்ம பலன் என்று சொல்லுகிறது. உணர்ச்சி மாறுதல்களாலேயே தேக ஸ்திதியும் மாறிடுவிடுகிறது என்று மனோ தத்துவ நிபுணர்கள் சொல்லுகிறார்கள். இப்படி ஒன்றுக்கே பல காரணங்கள் சொல்லப்படுகின்றன. உண்மையில் கிரஹ கதியால் வருகிறதா? தாதுக்களால் வருகிறதா? மனத்தின் சலனத்தால் வருகிறதா? மற்றவைகளால் வருகிறதா?

இவற்றில் ஒன்றும் பொய்யில்லை. எல்லாம் காரணங்களே. எல்லாம் ஒன்றின் அடையாளங்களே. நாம் தெரிந்து கொள்ளுவதற்காக, இப்படிப் பல வகையிலும் காரணங்கள் ஏற்பட்டு ஒன்றாகக் கூடி அனுபவத்தைக் கொடுக்கின்றன. ஒவ்வொருவர் ஒவ்வொரு காரணத்தை எடுத்துக் கொள்கிறார்கள்.

**—ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

---

ஓடம்பிலே சதை போட்டிருக்கு. வரணும். வரணும். இந்தக் கிழவனைத் தேடிட்டு வந்தது எனக்கு ரொம்ப சந்தோஷமாயிருக்கு. ஜானா.... ஜானா.... நான் சொல்வேனே, அந்த ராஜசேகரன்.... அந்த மாலதி.... வாங்கோ.... வாங்கோ....

"வெளிய போர்டு பார்த்தோம். அதே நவநீத கிருஷ்ணன்தானா, இல்லியான்னு பாக்கணும்னு ஆசை. நொழைஞ்சோம்" என்று நொண்டியாய் ஒரு வாக்கியத்தைச் செருகினேன்.

"ரொம்ப நல்லது.... ரொம்ப நல்லது" என்றார் அவர். என் எதிரில் ஒரு சோஃபாவில் உட்கார்ந்து கொண்டார்.

"அப்புறம்.... சொல்லு.... கொழந்தைங்களா? எத்தனை கொழந்தைங்க. ஒனக்கு எத்தினி இருந்தாலும் எல்லாம் ஜெம்ஸாத்தான் இருக்கும்.... என்ன செய்யறே.... சொல்லு" என்றார்.

"மாலராஜா இண்டஸ்ட்ரீஸ்னு தனியா ஒரு கம்பெனி வெச்சி நடத்தறேன். ரெண்டு கொழந்தைங்க. இதில ஒண்ணு, அதில ஒண்ணு. ஒங்க ஆசீர்வாதத்தில காரும், பங்களாவுமா, லைஃப் சௌகரியமா போய்ட்டிருக்கு" என்றேன். அந்த 'ஒங்க ஆசீர்வாதத்' திற்கு நிறையவே அழுத்தம் கொடுத்தேன். மனிதர் புரிந்து கொண்டிருப்பார்.

நவநீத கிருஷ்ணன் ஒன்றும் சொல்லாமல் என்னைப் பார்த்துச் சிரித்தார். லேசாய்ச் சிரிப்பு ஆரம்பித்து, கடகடவென்று பெரிதாக இருமலில் முடிந்தது. அவர் கண்களில் நீர் கரை கட்டிவிட்டது.

"எதுக்கு இந்தச் சிரிப்பு?" என்றேன்.

"ஒங்க ஆசீர்வாதம்னியே. அதை நெனைச்சேன். சிரிச்சேன்."

மாலதி அதுவரை பொறுமையாய்த்தான் கேட்டுக் கொண்டிருந்தாள். இருந்தாலும் திடீரென்று அவளுக்குப் பொத்துக்கொண்டு வந்துவிட்டது.

"இது என்ன நக்கல் சிரிப்பு? அன்னிக்கு எதுக்கெடுத்தாலும் எடறி, எடறி விட்டதென்ன? வெளியில திமர்னு தொரத்திவிட்டதென்ன? ஒரு குடும்பத்தைத் தாங்கின இந்த

மனுஷன் அப்ப எப்படி ஒடஞ்சி போனார்னு உங்களுக்குத்தெரியுமா?"என்றுஓர் இரைச்சல் போட்டவளை நான் அமைதிப்படுத்தினேன்.

நவநீத கிருஷ்ணன் மூச்சிரைக்க, மூச்சிரைக்க "ஒரு கதை சொல்லட்டுமா?" என்றார் சம்பந்தா சம்பந்தமில்லாமல்.

நான் அமைதியாய் இருந்தேன்.

"மகா பாரதச் சண்டை முடிஞ்சி தர்மர் சக்கரவர்த்தி ஆயிட்டார். பீஷ்மர் உத்தராயண காலத்தில உசிரை விடணுங்கறதுக்காக அம்புப் படுக்கையிலேயே படுத்திருக்கார். அப்போ அவர்கிட்ட புத்திமதி கேட்டுக்கறதுக்காக தர்மர், திரௌபதி, மத்த எல்லா ப்ரதர்ஸூம் அங்கே வந்து சேர்றாங்க. மக்கள் கடமை என்ன, ராஜ்யாதிபதி கடமை என்னன்னு ஒவ்வொரு கேள்வியா தருமர் கேட்கிறார். பீஷ்மரும் பதில் சொல்லிட்டே வர்றார். திடீர்னு ஒரு சிரிப்புச் சத்தம் கேக்கறது. சிரிச்சது யார்னா திரௌபதி. பீஷ்மர் உபதேசம் பண்றதை நிறுத்திட்டுப் பாஞ்சாலியைப் பார்த்து 'ஏன் சிரிச்சே'ன்னு கேக்கறார். 'இவ்வளவு தூரம் இப்ப தர்மோபதேசம் செய்றீங்களே. அன்னைக்கு கௌரவர் சபையில துச்சாதனன் என் புடவையை அவிழ்த்தப்போ, நீங்களுந்தானே, எல்லாம் தெரிஞ்ச ஞானவானா இருந்தும், பேசாமப் பாத்துட்டு இருந்தீங்க. அப்ப இந்த ஞானம், தர்மம் எல்லாத்தையும் நீங்க எங்க விட்டு வச்சிருந்திங்களோன்னு நெனைச்சேன். சிரிப்புவந்தது'ன்னு திரௌபதி சொல்றா.

"பீஷ்மர் கோபப்பட்டுக்கலே. அமைதியாவே பதில் சொல்றார்:

"நீ சொல்றதெல்லாம் வாஸ்தவந்தான் மகளே. நான் துரியோதனன் சபையில இருந்தப்ப எனக்கு அற விஷயங்களைப் பத்தின அறிவு இருக்கத்தான் இருந்தது. ஆனா துஷ்டனான துரியோதனன் போட்ட சாப்பாட்டை அப்ப நான் சாப்பிட்டுகிட்டிருந்தேன். அதனால என் அறிவு மங்கிப் போச்சு. நன்மை எது, தீமை எதுன்னு யோசிக்கிற அளவுக்கு என் மூளைக்கு சக்தி இல்லாமப் போய்டிச்சு. கெட்டவங்க போடற சாப்பாடு சாப்ட்டா மனசும் உடம்பும் கெட்டுப் போய்டும்னு சாஸ்திரமும் சொல்றது. இப்ப அர்ஜுனன் விட்ட அம்பால என் ஒடம்புல இருக்கிற கெட்ட ரத்தமெல்லாம் போய்ட்டதால என் புத்தி தெளிஞ்சு போய்ட்டது. அதனாலதான் இப்ப தர்ம தத்துவமெல்லாம் என்னால சொல்ல முடியுது'ன்னு சொன்னார்.

"அது மாதிரிதான் நானும். நான் பீஷ்மாச்சாரியார் இல்லதான். ஆனா அந்த வடக்கத்தி முதலாளி வாலைப் பிடிச்சிகிட்டே இருந்தாத்தான் அங்க என்னால ஸ்திரமா இருக்க முடியும். அதனாலதான் யாரைப் பத்தியாவது ஏதாவது சொல்லிட்டேயிருந்தேன். அவன் போட்ட சாப்பாடு இல்லியா. என் புத்தியும் தடுமாறிப் போய் எசகு, பெசகா ஏதாவது செய்ஞ்சிருக்கும். இந்த ராஜசேகரன் அதே வடக்கத்தியான்கிட்ட இருந்திருந்தா, இந்த ஆறு வருஷத்தில அவன் சம்பளம் ரெண்டாயிரத்து ஐநூறைத் தாண்டியிருந்தா ஜாஸ்தி. ஆனா இவன் மூளையை யூஸ் பண்ணி அவன் லட்ச லட்சமா சம்பாதிச்சிடுவான். ஒரு வகையில ராஜசேகரன் வெளிய போறதும் நல்லதுக்குன்னு நெனைச்சித்தான் நான் அப்படி பண்ணினேன். ராஜசேகரனும் சோடை போகலே!

"இப்ப சொல்லு மாலதி.... நான் செஞ்சது தப்பா.... சொல்லு ராஜாத்தி, ஒன் புருஷனுக்கு நான் துரோகமா பண்ணிட்டேன்?"

நவநீத கிருஷ்ணன் மேலே பேச முடியாமல் சிறு குழந்தை மாதிரி அழ ஆரம்பித்தார்.

என் கண்களிலும் கண்ணீர் திரண்டிருந்தது. நானும் உணர்ச்சி வசப்பட்டு விட்டேனா என்ன?

மாலதி திடீரென்று எழுந்தாள். நவநீத கிருஷ்ணன் காலில் விழுந்து, "என்னை மன்னிச்சுடுங்கமாமா" என்றாள் அதீத உணர்ச்சி வசப்பட்டு.

---



## அண்ணா சொன்னது என்ன?

ஜனநாயக ஆட்சி முறையில் அரசுக் கட்டில், எவருக்கும் கிடைத்துவிடக் கூடும்; அவர்கள் எந்தக் காரணத்தாலாவது மக்களின் பேராதரவைப் பெற்றிட்டால், அரசாள வாய்ப்புக் கிடைத்த பிறகு, அவர்களிலே பலருக்கு, எங்கு இருந்தோம், எங்கே வந்திருக்கிறோம்? என்ன முறையாலே வந்தோம்? என்னென்ன கூறிவிட்டு வந்திருக்கிறோம்? என்பவைகள் மறந்து போகின்றன. பழங்கதையாகிவிடுகின்றன.... நாம் பெரிய ஆசாமி என்ற நினைப்பு மேலோங்கிவிடுகிறது.... தகுதிகள் யாவும் தமக்கே உண்டு என்ற தருக்கு தலைக்கு ஏறிவிடுகிறது... பெரிய இடத்தில் உள்ளவர் பேசுகிறார் என்பதால் கேட்டுக் கொள்கிறார்கள், சகித்துக் கொள்கிறார்கள். அதைக் கண்டதும் ஆணவம் மேலும் வளருகிறது. டாக்டர்களுக்கு மருத்துவ முறை பற்றியும், பொறியியல் துறையினருக்குக் கட்டட அமைப்புப் பற்றியும், பேராசிரியர்களுக்குக் கல்வியின் மேம்பாடு பற்றியும், தொழிலதிபர்களுக்குத் தொழிற்சாலை அமைப்பு பற்றியும் புத்தி மதி கூற முனைந்து விடுகிறார்கள். ....கனவான், கடற்கரையில் காற்று வாங்குகிறார்! காசில்லாதவனை அதே இடத்தில் கண்டால்? கடலோரம் அலைந்து கொண்டிருக்கிறான் என்கிறோமல்லவா! பதவியில் உள்ளவர்கள் பற்றி இதே போலத்தான், பேசுகிறோம்.

(அறிஞர் அண்ணாவின் 'தம்பிக்கு' கடிதங்களிலிருந்து — 'வெஸ்')

**ப**த்திரிகை அலுவலகத்தில் சந்திரசூடனைச் சந்தித்துச் சம்பத் வெகு நேரம் வாதாடினார்.

''இந்திராணியின் வரலாற்றை எழுதினால் உனக்கு என்ன குறைந்துவிடும்?'' என்றார்.

''குறைவு நிறைவு பற்றி நான் கணக்குப் போடவில்லை. போயும் போயும் எனக்கு எழுத வேறு விஷயமே இல்லையா?'' என்றார் சந்திரசூடன்.

''எத்தனையோ விஷயங்களைப் பற்றி நீ எழுதிவிட்டாய். இனிமேல்தான் உனக்குப் பெரும் புகழும் வரவேண்டும் என்றில்லை. ஒரு சிறந்த எழுத்தாளன், மக்களின் அபிமானத்தைப் பெற்ற ஒரு நடிகையைப் பற்றி எழுதும்போது அந்தப் புத்தகத்திற்கே தனி மதிப்பு வந்துவிடும். அவளுக்காக மூன்று பேர் தற்கொலையே செய்திருக்கிறார்கள். ரசிகர்களின் உள்ளங்களில் அவளுடைய பாதிப்புஎவ்வளவுதீவிரமாயிருந்திருக்கிறது!''

சம்பத்சொன்னதைக்கேட்டவாறேசந்திரசூடன் மௌனமாக வெற்றிலை போடத் தொடங்கினார். சம்பத் தொடர்ந்து சொன்னார்: ''உன்னுடைய பத்திரிகை முதலாளியும் இதில் அக்கறை கொண்டிருக்கிறார்.''

''இது உன் வேலை. நீதான் அவரைத் தூண்டி விட்டிருக்கிறாய்.''

''இந்திராணியின் வாழ்க்கை பற்றி நீ எழுதும்போது உன் பத்திரிகையின் விற்பனை பல ஆயிரங்கள் உயர்ந்துவிடுமே. எழுது. செட்டியாரிடம் லட்ச ரூபாய் வாங்கித் தருகிறேன். சொந்தமாகப் பத்திரிகை ஆரம்பிக்க வேண்டும் என்னும் உன் ஆசை நிறைவேறும்.''

''பத்திரிகை ஆரம்பிப்பதற்கு இப்படிப் பணம் சம்பாதிக்க வேண்டாம்.''

சம்பத் அவரை உறுத்துப் பார்த்தார். ''ஒன்று சொல்லட்டுமா? அவள் செத்துப் போனதற்குக் காரணமே நீதான்'' என்றார் கோபத்துடன்.

இதைக் கேட்டு சந்திரசூடன், திடுக்கிட்டு நிமிர்ந்தார். ''அடப்பாவி, நானா காரணம்?''

''நீயேதான். அவளுக்கு ஊர்வசிப் பரிசும் கிடைக்காதபடி தடுத்துக் கொண்டிருந்தவன் நீதான். நீங்கள் இருவரும் நண்பர்களாயிருந்தீர்கள். நட்பைக் கருதியாவது நீ அவளுக்கு உதவியிருக்கலாம். அந்த ஏமாற்றத்தில்தான் தற்கொலை செய்து கொண்டாள். ஒரு வகையில் நீதான் அவளைக் கொன்றுவிட்டாய்'' என்று சம்பத் ஆவேசமாகக் கூறினார்.

சந்திரசூடன் திகைப்புற்று மௌனமாகத் தரையைப் பார்த்தவாறு இருந்தார். அவருடைய மனத்தில் ஊசலாட்டம் தோன்றியது.

''உன் சிநேகிதிக்குப் பிராயசித்தம் செய்வதற்காவது அவளுடைய வரலாற்றைச் சிறப்பாக எழுது. உன்னுடைய பாவத்தை இப்படியாவது கழுவிக் கொள்'' என்றார் சம்பத்.

சந்திரசூடனின் மனத்தில் வலியெடுத்தது — ''வெற்றி உங்களுக்குத்தான். போதுமா? திருப்திதானா.....? எழுதுகிறேன்!''

சம்பத் துள்ளிக் குதித்தெழுந்து அவரை அணைத்துக் கொண்டார். ''இன்று சாயங்



காலமே செட்டியாரிடம் அட்வான்சாக செக் வாங்கி வருகிறேன்'' என்று உற்சாகத்துடன் கூறிவிட்டு வெளியேறினார்.

* * * * *

அன்று மாலை சந்திரசூடன் சிறைச் சாலைக்குச் சென்றபோது நல்ல கதை கிடைத்தது. அந்தக் கைதியின் கடந்த காலம், அவனுடைய எண்ணங்கள் எல்லாமே விசித்திரமானவை.

அவர் சைக்கிளில் சிறைச்சாலையை நோக்கிச் சென்றபோதே சிறையின் சூழ்நிலை அவருடைய சிந்தனையில் படர்ந்தது. அவரும் ஒருநாள் சிறையில் இருந்திருக்கிறார். அவருடைய இளமைப் பருவத்தில் — அறிவும் இளமையாக, மிக்கத் துடிப்புடன் ஆனால், பக்குவப்படாத நிலையில் — ஏதோ கொள்கை என்று கூறிக் கொண்டு சிறை செல்ல நேரிட்டது. அப்போது அவர் கம்யூனிஸ்ட் கட்சியில் இருந்தார். ஒரு தொழிற்சாலையில் மறியலில் ஈடுபட்டபோது ஒரு நாள் சிறையில் இருக்க நேரிட்டது. அது ஒரு புதுமையான அனுபவம்.

ஓ! அந்த இருபத்து நான்கு மணி நேரத்தில் அவர் பெற்ற அனுபவம்தான் எத்தனை! சாதாரண திருடனிலிருந்து கொடிய கொலைகாரன்வரை எத்தனை விதமான ஜந்துக்களை அங்கு சந்தித்தார்!

சிறைச்சாலை எதற்காக? சமுதாயத்திலிருந்து குற்றவாளியைப் பிரித்து ஒதுக்கி வைக்கத்தான். ஆனால் எல்லாம் தற்காலிகந்தானே. சில நாட்களுக்குப் பிறகு அவன், சமுதாயத்தில் மீண்டும் ஒருவனாகத் திரியப் போகிறான். மீண்டும் அவன் குற்றம் புரிய மாட்டான் என்பது என்ன நிச்சயம்? சிறை, உண்மையிலேயே தடுக்கிறதா? மனிதன் தானாகத் திருந்த வேண்டும் என்று எண்ணினால் ஒழிய எந்தச் சிறைதான் என்ன செய்ய முடியும்? ஆனால் திருந்த வைப்பது எப்படி....?

சந்திரசூடன் சிறைச்சாலையை அடைந்தபோது, அந்தக் கைதி, மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டிருப்பதாகத் தகவல் கிடைத்தது. சிறை அதிகாரியின் அனுமதியைப் பெற்றுக் கொண்டு மருத்துவ மனைக்குச் சென்றார். அந்தக் கைதி படுத்திருந்த அறைக்கு வெளியே ஒரு போலீஸ்காரர் காவலிருந்தார்.

அந்த அறைக்குள் சந்திரசூடன் சென்றதும், அந்தக் கைதி பரபரப்புடன் எழுந்து உட்கார்ந்தான். வயது முப்பது இருக்கும். படித்த களை கண்களில் தெரிந்தது.

இவன் எப்படிக் குற்றம் புரிந்திருக்க முடியும்? நாகரிகமானவனாகத் தோற்றமளிக்கும் அந்த உடலுக்குள் மிருகமும் இருந்திருக்கிறது....



# உணர்வுகள் உறங்குவதில்லை

## ர.சு.நல்லபெருமாள்

சந்திரசூடன் அவனுடைய கட்டிலை நெருங்கியதும் அவருடைய கைகளைப் பற்றிக் கொண்டான்.

''நீங்கள் வரமாட்டீர்கள் என்று நினைத்தேன்'' என்று கூறிச் சிரித்தான்.

''ஏன் அப்படி நினைத்தாய்?''

''என்னை யாரும் சந்திக்க வருவதில்லை'' என்றான்.

அருகே இருந்த ஸ்டூலின் மீது அமர்ந்தார். அந்த அறையைச் சுற்றி ஒருமுறை பார்த்தார். மற்றப் படுக்கைகள் காலியாக இருந்தன. அறைக்குள் மருத்துவ மனையின் நெடி வீசியது. அவனுடைய கட்டிலுக்கு அருகே சுவரில் ஆங்காங்கே சில படங்களை ஒட்டி வைத்திருந்தான். நேரு, மகாத்மா காந்தி, விவேகானந்தர்.... இந்திராணியும் இருந்தாள்.

''மகாத்மாவின் படம் எனக்குத் தெம்பளிக்கும் சார். அவருடைய படத்தைப் பார்த்துப் பார்த்துத்தான் நான் இங்கே ஓரளவு உற்சாகத்தோடிருக்கிறேன். என்னைப் போல் அவரும் எத்தனையோ முறை சிறை வாழ்க்கையை அனுபவித்தவரில்லையா?'' என்றான் கைதி.

அதைக் கேட்டு சந்திரசூடனுக்குச் சிரிப்பு வந்தது. மகாத்மா காந்தி சிறை சென்றதும் இவன் சிறையில் இருப்பதும் ஒன்றா? தன்னை அவரோடு இணைத்துப் பேசுகிறானே.....

அந்தக் கைதி சுவரில் எழுதியிருந்ததை சந்திர சூடன் படித்தார்:

''உழைப்பின் பயனால்
உருவான தேன்கூட்டை
நெருங்கினால்
கொட்டும் தேனீ.
ஆறறிவில்லாப் பூச்சியே இப்படி!
மனிதா நீ எப்படி?
செந்நீரும் கண்ணீரும் கூட்டி நீ
உருவாக்கிய சுதந்திரக் கூடு
கொள்ளைக்கு அரசுடமை
என்றே பேர் சூட்டி
குளிர் மாஸ்கோவின்
கொடிகாட்டும் வம்பினால்
பறி போகுதே உன் கூடு!
மனிதா நீ எப்படி.....?''

படித்து முடித்துவிட்டு வியப்புடன் திரும்பி, ''உனக்கு மாஸ்கோ தத்துவங்கள் பிடிக்காதோ?'' என்று கேட்டார்.

''சுதந்திரத்தைப் பறிக்கும் எதுவும் எனக்குப் பிடிக்காது'' என்றான்.

சந்திரசூடனுக்கு உள்ளூரச் சிரிப்பு வந்தது. இவ்வளவு சுதந்திரப் பிரியன், சுதந்திரத்தை இழந்து சிறைக்குள்ளிருக்கும் விந்தையை எண்ணினார்.

''என்னுடைய அம்மாவைப் பெற்ற பாட்டனாருடைய தகப்பனார் கவிதைகள் இயற்றுவாராம். அந்த வாசனைதான்'' என்றான். குரலில் பெருமை தொனித்தது.

''ஓ! புலவர் பரம்பரை. பாரம்பரியம் இரத்தத்தில் தொடர்கிறது'' என்றார் சந்திர சூடன். அவனை உற்றுப் பார்த்தார்.

கற்பனை வாதத்திற்கு இவனுக்குப் பாரம்பரியம் இருப்பதுபோல், இவனுடைய குற்றங்களுக்கும் பாரம்பரியத் தொடர்பு இருக்குமோ? இவனுடைய பாட்டனோ அல்லது முப்பாட்டனோ குற்றம் புரிவதையே தொழிலாகக் கொண்டிருந்திருப்பாரோ? .

''என்ன சார், அப்படிப் பார்க்கிறீர்கள்?'' என்று அவன் கேட்டதும் சந்திரசூடன் துணுக்குற்றார்.

''ஒன்றுமில்லை. உனக்கு இவ்வளவு திறமை இருக்கிறதே என்ற வியப்புத்தான்'' என்று சமாளித்தார்.

அதன் பிறகு அவன் பல விஷயங்கள் பற்றிப் பேசினான். சந்திர சூடனின் புதிய நாவலை விமர்சித்தான். அவனிடம் அமைந்திருந்த இலக்கிய பிரக்ஞையைக் கண்டு சந்திர சூடன் வியந்து போனார்.

''சார் உங்களோடு நிறையப் பேச ஆசைதான். நேரம்தான் காணாது. நீங்கள் என்னைப் பார்க்க வந்தது எனக்கு ரொம்பப் பெருமையாயிருக்கிறது. நீங்கள் வருவீர்கள் என்றே நான் எதிர்பார்க்கவில்லை சார்'' என்றான் வியப்புடன். பிறகு சொன்னான், ''என்னை யாரும் பார்க்க வருவதில்லை.''

''உன் தாயார் வருவதில்லையா?''

''பாவம். அவளுக்குப் பார்வை சரியாக இல்லை. இரண்டு முறை வந்திருக்கிறாள். வேறு யாரும் வருவதில்லை.''

''எவ்வளவு நாட்களாக இங்கிருக்கிறாய்?''

''இரண்டு வருஷங்கள் கழிந்துவிட்டன. இன்னும் ஒரு வருஷம் இருக்கிறது'' என்று கூறித் தலையைக் குனிந்து கொண்டான்.



''உன்னைப் பெண் பார்க்க வந்தவங்க ஏன் வேண்டாம்னு சொல்லிட்டாங்க...?''

''உன் 'ஹாபி' என்னன்னு கேட்டதுக்கு, தெரியாத்தனமா டி. வி. நாடகங்களைப் பார்ப்பதுன்னு சொல்லிட்டேன். இவ்வளவு மட்டமான ரசிப்புத் தன்மை உடைய பெண் எங்களுக்கு வேண்டாம்னு சொல்லிட்டாங்க!''

—விக.

# ரெடிமணி கிளப் ஹவுஸ்
# திறப்பு விழா

## வாடிக்கையாளர்களுக்கு அதிக வசதிகளை அளிக்கும் வகையில் தனிப்பட்ட, புதியதோர் 'மத்திய சேவை நிலையம்'



# Readymoney

**மனங்கவர் துவக்கவிழாச் சலுகைகள் — ரெடிமணி கிளப் ஹவுஸில் மட்டுமே!**

ரெடிமணி கிளப் ஹவுஸில் தாமதிக்காமல் உடனே பதிவு செய்துகொள்ளுங்கள். ரெடிமணியின் பிரபலமான இரு உறுப்பினர் நிறுவனங்களான ஜி.ஆர். தங்க மாளிகை மற்றும் குமரன் சில்க்ஸில் 7½% தள்ளுபடிச் சலுகையைப் பெற்றுவிடுங்கள். தீபாவளிக்குத் தேவையானவற்றை வாங்குவதற்கு இது ஒரு அரிய சந்தர்ப்பம்

'ஹேப்பி ஹோம்' திட்டத்தில் சேரும் ஒவ்வொரு புதிய உறுப்பினருக்கும் ரூ. 125/- பெறுமானமுள்ள ஒரு இலவசப் பரிசுக் கூப்பன் அளிக்கப்படுகிறது

---

கிளப் ஹவுஸ், வாரத்தின் எல்லா நாட்களிலும், காலை 10 மணி முதல் இரவு 9 மணி வரை திறந்திருக்கும். ஞாயிற்றுக்கிழமைகளிலும் உண்டு.

---

**7½%**

---

**சிறப்புத் தள்ளுபடி**

**செப்டம்பர் 5 முதல் 15ந்தேதி வரை**

''செலவழிக்கும்போதே சேமிக்க உதவும்'' திட்டத்தில் சேரும் புதிய உறுப்பினர்களுக்கு மட்டுமே இச்சலுகை.

Kumaran Silks

---

மேலும் விவரங்களுக்கு உடனே அணுகவேண்டிய முகவரி:

**ரெடிமணி கிளப் ஹவுஸ்**

'மத்திய சேவை நிலையம்'

105 டாக்டர் ராதாகிருஷ்ணன் சாலை, சென்னை – 600 004. தொலைபேசி: 847365

ஷாப்பர்ஸ் இன்வெஸ்ட்மெண்ட் & பைனான்ஸ் கம்பெனி லிமிடெட்

SAA RHP/3232



பேச்சாளர்: ''நாங்க 'உறவுக்குக் கைகொடுப்போம்; உரிமைக்குக் குரல் கொடுப்போம்'''

கூட்டத்தில் ஒருவர்: ''அவசரத்துக்குக் 'கூடன்' கொடுப்பீங்களா?''

—எஸ். வெங்கட்ராமன்.



''என்ன குற்றத்திற்காக இங்கே இருக்கிறாய்?''

''கோபத்தில் ஒரு பெண்ணைத் தாக்கிவிட்டேன்'' என்று கூறிவிட்டு மீண்டும் தலையைக் குனிந்து கொண்டான்.

''பி. ஏ. வரை படித்திருக்கிறாய். நல்லது கெட்டது தெரியாமலா இருக்கிறாய்?'' என்றார்.

''தெரியும் சார், தெரியும். ஆனால் இதில் பிரச்னையே நான்தான். எனக்கு நானேதான் பிரச்னை. என்னைப் பார்த்துத்தான் எனக்கே பயமாயிருக்கிறது. ஏதோ சந்தர்ப்பம் சூழும் போது குற்றம் புரிந்துவிடுகிறேன். ஏதோ ஒரு வேகம் என்னுள்ளிருந்து தூண்டிவிடுகிறது'' என்றான்.

''இங்கு நீ எப்படி இருக்கிறாய்?''

''சுதந்திரத்தை இழந்திருக்கிறேன். நான் நானாகவே இல்லை. என் மீதே எனக்குக் கோபம் வருகிறது. என்னுடைய குணம்சங்கள் எல்லாம் இங்கே குழம்பிக் கிடக்கின்றன. எனக்கே நான் யாரோ வேற்று மனிதனைப் போல் தோற்றமளிக்கிறேன். இது பெரிய கொடுமை சார்'' என்றான். அவன் குரல் நடுங்கியது.

''இந்த மருத்துவ மனையில்தான் கொஞ்சம் சுதந்திரத்தை அனுபவிக்கிறேன். ஒரு இரகசியம் உங்களிடம் சொல்லட்டுமா?'' என்று கேட்டுச் சிரித்தான்.

சந்திர சூடன் தலையை அசைத்தார்.

''உண்மையில் என் உடம்பிற்கு ஒன்றும் இல்லை சார். நன்றாகத்தானிருக்கிறேன். வயிற்று வலி என்று சொல்லித் துடித்தேன். இங்கே அனுப்பிவிட்டார்கள். கொஞ்சம் சுதந்திரம் பெறுவதற்காகப் பொய் சொல்ல வேண்டியிருக்கிறது'' என்று கூறிச் சிரித்தான். பிறகு, ''சார், நீங்கள் ஒரு உதவி செய்ய முடியுமா? நீங்கள் நினைத்தால் நடக்கும்'' என்றான்.

சந்திர சூடன் புரியாமல் அவனைப் பார்த்தார்.

''நீங்கள் சிபாரிசு செய்தால் எனக்கு விடுதலை கிடைக்கும்'' என்றான்.

''என்னுடைய சிபாரிசுக்கு மதிப்பிருக்காதே.''

''நீங்கள் பெரிய எழுத்தாளர். நீங்கள் சொன்னால் முதன் மந்திரி உடனே சம்மதிப்பாரே.''

''இது சிறைச்சாலை விஷயம்.''

''நீங்கள் சிபாரிசு செய்தால் நடக்கும்.''

சந்திரசூடன் யோசனையில் ஆழ்ந்தார். திடீரென்று அவருடைய கைகளை பற்றிக் கொண்டு ''சார், நீங்கள் நினைத்தால் எனக்கு விடுதலை கிடைக்கும். இரண்டு ஆண்டுகளைக் கழித்துவிட்டேன். இன்னும் ஒரு ஆண்டு இருக்கிறது. நான் வெளியே வர வேண்டும். நான் நானாக வாழ வேண்டும். முடியுமா சார்.....? முடியுமா?'' என்று படபடப்புடன் கேட்டான்.

''முயற்சி செய்கிறேன்'' என்றார் சந்திரசூடன்.

அவனுக்கு நம்பிக்கை வரவில்லை. விரக்தியுடன் சிரித்தான். சந்தேகத்துடன் அவரைப் பார்த்தான். ஒரு நீண்ட பெருமூச்சு விட்டபடி தரையைப் பார்த்தவாறு, ''பிரமன் என்னைப் படைக்கும்போதே தலையில் சிறைச்சாலையின் முத்திரையைக் குத்தி அனுப்பிவிட்டான். நான் இப்படி சிறையிலேயே வாழ்ந்து சாக வேண்டியதுதான்'' என்றான்.

சந்திரசூடன் அவனுடைய தோளில் கையை வைத்து ஆதரவாக அழுத்தினார். ''முத்துராமன், கட்டாயம் நான் உனக்காகச் சிபார்சு செய்கிறேன்'' என்றார்.

அவரை நன்றிப் பெருக்குடன் பார்த்தான், ''சார், இங்கே என்னைப் பெயர் சொல்லிக் கூப்பிட்டதே நீங்கள்தான். இங்கே என் பெயர் வெறும் நம்பர்தான். என் பெயரைக் கேட்டே இரண்டு ஆண்டுகள் ஆகிவிட்டன'' என்று கூறியபடியே அவருடைய கைகளை வாஞ்சையுடன் அழுத்தினான். அவன் கைகள் சற்று நடுங்கின.

காவல் அதிகாரி, வாசலில் வந்து நின்றார். பேட்டி நேரம் முடிவடைந்துவிட்டதை அறிந்த சந்திரசூடன் எழுந்தார். அவனிடம் விடை பெற்று வாசலை நோக்கி நடந்தார். ஒரு முறை அவனைத் திரும்பிப் பார்த்தார். அவனுடைய முகத்தில் விரக்தி இருந்தது. 'ஏதோ ஒப்புக்கு சிபாரிசு செய்வதாகச் சொல்லிவிட்டுப் போகிறார். வெளியே போனதும் என்னை மறந்துவிடுவார்' என்று அவனுடைய கண்கள் கூறின.

''முத்துராமன், நிச்சயமாக உனக்காக முயற்சி செய்வேன். மறந்துவிட மாட்டேன்'' என்றார் சந்திரசூடன்.

முத்துராமன் கையெடுத்து அவரைக் கும்பிட்டான்.

(தொடரும்)

ஆறிலிருந்து அறுபது வரை அனைவரும் ஆரோக்கியமாக வாழ

# காயகல்பம்

எல்லாம் வல்ல இறைவன் மனித இனம் கொஞ்சிக் குலவும் குழந்தைப் பருவம் முதல் மூண்டு தட்டிய முதுமைப் பருவம் வரை ஆண்கள், பெண்கள் ஆகிய அனைவரும் ஆரோக்கியமாகவும், இளமையோடும், வலிமையோடும் வாழ்வதற்கு அவசியமான இயற்கை வளங்களை உலகமெங்கும் ஏராளமாக படைத்திருக்கிறான். இவ்வாறான இயற்கை செல்வங்களில் தேர்ந்தெடுக்கப்பட்ட கற்ப மூலிகைகளையும் தங்கம், வெள்ளி முதலிய நவலோக பற்பங்களையும் தாது உப்புக்களையும், நவீன விஞ்ஞான அடிப்படையில் ஒன்றாக இணைத்து காயகல்பம் உருவாக்கப்பட்டிருக்கிறது. சின்னஞ்சிறு வயது முதல் வயோதிகப் பருவம் வரை அனைவரும் ஆரோக்கியமாக வாழ்வதற்கு அவசியமான அரிய பல மருந்துகள் காயகல்பத்தில் அடங்கி இருக்கின்றன.

### குழந்தைகள்

சளைச்சூடு, கக்குவான் இருமல், க்ஷயரோக தேகவாகு, அடிக்கடி தடிமன் பிடித்தல் போன்ற நோய் தொடிகளால் நலிந்தும், மெலிந்தும் அவதியுறும் குழந்தைகளுக்கும் சிறுவர்—சிறுமிகளுக்கும் காயகல்பம் அமிர்தம் போன்று வேலை செய்யும். நோய் எதிர்ப்பு சக்தியை அதிகரிக்கச் செய்து உடல் ஆரோக்கியத்தை பாதுகாக்கும்.

### இளைஞர்கள்

வயதிற்கேற்ற உடல் வளர்ச்சியும், மன வலிமையும் இல்லாமல் தன்னம்பிக்கையை இழந்து, தடுமாறுகின்ற இன்றைய இளைஞர்களும், யுவதிகளும் தெம்பும் துணிவும் பெற்று வாழ்க்கையில் முன்னேறுவதற்கு காயகல்பம் ஊக்கமும், உற்சாகமும் அளிக்கும்.

வாழ்க்கை போராட்டத்தில் அலுத்து சலித்து: விரக்தி அடைந்துள்ள நடுத்தர வயதினருக்கு — தத்தளிக்கும் தம்பதிகளுக்கு — காயகல்பம் ஒரு கைகண்ட மருந்து. வாழ்க்கையை முழுமையாக அனுபவிக்க உதவி செய்யும்.

### முதியவர்கள்

முதியவர்களுக்கு காயகல்பம் ஒரு வலுவான ஊன்றுகோல் போன்றது. முதுமையில் தோன்றுகின்ற வாயுக் கோளாறுகள், வயிற்றுப் பொருமல், பசியின்மை, மலச்சிக்கல், நெஞ்செரிவு, இதய பலவீனம், படபடப்பு, இரத்தக் கொதிப்பு, உடல்பலம் குன்றுதல், மாதவிடாய்க் கோளாறுகள், உடல் களைச்சல் முதலிய நிலைமைகளில் காயகல்பம் நன்கு பயன்படுகிறது.

### நீரிழிவு நோயினருக்கு

நீரிழிவிற்கு காயகல்பம் ஒரு நிவாரணி அல்ல. எனினும் நீரிழிவு நோயினருக்கு ஏற்படுகிற பலவீன நிலைமையை காயகல்பம் அகற்றுகிறது. அவர்கள் வழக்கமாக உட்கொள்ளும் நீரிழிவிற்கான ஆங்கில மருந்துகளுடன் காயகல்பத்தையும் உட்கொள்ளலாம்.

### உடற்சூடு குறைய

காயகல்பத்தில் தங்கம் முதலிய நவலோகங்கள் அடங்கி இருப்பதால் இதை உட்கொண்ட பின் குளிர்ச்சி தரும் ஆகார வகைகளை சேர்த்துக் கொள்வது நல்லது. எங்கள் ஹெர்பல் ஹேர் க்ரீம், ஹெர்பல் ஹேர் டானிக், ஹெர்பல் ஹேர்கேர் போன்ற தயாரிப்புகளை தலைக்கு பயன் படுத்துவதால் உடற்சூடு குறையும். இது தவிர காயகல்பத்திற்கு பத்தியம் எதுவும் இல்லை.

காயகல்பம் தவிர, முடி உதிர்தலை தடுத்து நிறுத்தி முடி வளர்ச்சியை ஊக்குவிக்கக்கூடிய ஹெர்பல் ஹேர்க்ரீம், ஹெர்பல் ஹேர்டானிக் ஆகிய குளிர்ச்சி மிக்க கூந்தல் தைலங்களும் குற்றாலத்தில் குளித்தது போன்ற குளுமையை ஊட்டி, முடி உதிர்தலை நிறுத்தி பொடுகுகளையும், அழுக்குத் இளவுகளையும் உடனடியாகப் போக்கக் கூடிய "ஹெர்பல் ஹேர் கேர்.." என்ற மூலிகை ஷாம்பும், உடல் வலியையும், தசை வலியையும் போக்கி உடல் உறுப்புகளை உறுதிப்படுத்தக் கூடிய "ஹெர்பல் மசாஜ் க்ரீம்" என்ற மூலிகை தேய்ப்பு மருந்தும், முகப் பருக்களை நிவர்த்தி செய்து முக வசீகரத்தை அதிகரிக்கச் செய்யும் "பிம்பிளக்ஸ்" என்ற நறுமணம் கமழும் முகப்பரு நிவாரணியும், ஆடும் பற்களின் அசைவுகளை நிறுத்தி ஈறுகளை உறுதிப்படுத்தி, வாய் நாற்றத்தை போக்கி வாசம் கமழச் செய்யும் ஹெர்பல் டூத் பவுடர் என்ற மூலிகை பற்பொடியும் விஞ்ஞான அடிப்படையில் தயாரிக்கப்பட்டு விற்பனை செய்யப்படுகின்றன. டாக்டர் இ. ஷாஹுல் ஹமீதுவின் நீண்ட நெடுங்கால ஆராய்ச்சிகளின் பலனால் உருவாகியுள்ள இந்த அரிய மருந்துகள் தற்போது தமிழகத்தில் எல்லா நகரங்களிலும் விற்பனையாகின்றன. வெளி நாடுகளுக்கும் ஏற்றுமதியாகின்றன.

தயாரிப்பாளர்கள்:—

கிரவுன் ஹெர்பல்

ப்ராடக்ட்ஸ்;

55, ஹாரிஸ் சாலை,

சென்னை—600 002.

**விநியோகஸ்தர்கள்:—**

**P. Govindaswamy Pillai, S'pore (Pvt) Ltd., 46, 48, 50 & 52, Serangoon Road, Singapore—0821.**

மலேசியா M/S. சபரி எண்டர்பிரைசஸ், 335, ஜாலான் பசார், செட்டபாக், கோலாலம்பூர். திருச்சி மாவட்டம்: M/S. கரோஷ் ஏஜென்ஸீஸ், 1/F/1, புரோமினேட் ரோடு, கன்டோன்மென்ட், திருச்சி—1. மதுரை, இராமநாதபுரம் மாவட்டம்: M/S. தனலக்ஷ்மி ஏஜென்ஸீஸ், 80, வடக்கு சித்திரை வீதி, மதுரை—625 001. தென் ஆற்காடு மாவட்டம்: M.K. ஏஜென்ஸீஸ், 1/8, பாரதி ரோடு, கடலூர்—1. தஞ்சை மாவட்டம்: நீல் ஏஜென்ஸீஸ், 3/106, பீச் ரோடு, [illegible]. நெல்லை மாவட்டம்: மெஹர் ஏஜென்ஸீஸ், 42, சந்நாசி கிராமம், திருநெல்வேலி—1. குமரி மாவட்டம்: M. கோபாலன் ஆசான், 81, பால மோர் ரோடு, நாகர்கோவில்—1. கோவை மாவட்டம்: ஸ்ரீராம் அன்கோ, 902 செயின்ட் மிக்கேல் எம்போரியம், பெரிய கடை வீதி, கோவை—1. சேலம் மாவட்டம்: ஜெனரட்டி சென்டர், 87, கோட்டை மெயின் ரோடு, செவ்வாய்ப்பேட்டை, சேலம்—2. பெரியார் மாவட்டம்: நியு ராயல் ஸ்டோர்ஸ், பழைய பஸ் நிலையக் கட்டிடம், [illegible] தியேட்டர் அருகில், ஈரோடு—1. வட ஆற்காடு மாவட்டம்: கே. என். பார்மா, தென்னமரத் தெரு, வேலூர்—4.

—Advt

# காந்தி கிராமம் தயாரிக்கும் தரமான வீட்டு மருந்துகள் மற்றும் டானிக்குகள்

## ஒவ்வொரு குடும்பத்திலும் கைவசம் இருக்க வேண்டியவை

### வீட்டு மருந்துகள்

**ஓமவாட்டர்** — அஜீரணத்தை முழுக்க குணப்படுத்துகிறது.

**இஞ்சி எலுமிச்சை சிரப்** — பசியைத் தூண்டுகிறது.

**இஞ்சி மூரபா** — (ஜிஞ்சர் மூரபா) (அதரக்) — ஜீரண சக்தியை அதிகரிக்கிறது.

**பாவன ஜீரகம்** — தலைச் சுற்றலை நிறுத்துகிறது. வாயு உபாதையை போக்குகிறது.

**பாவன கடுக்காய்** — ஜீரண அபிவிருத்திக்கும் மலச்சிக்கலைப் போக்கவும் பயன்படுகிறது.

**ஆயுர்வேத பற்பொடி** — தேர்ந்தெடுக்கப்பட்ட மூலிகைகளிலிருந்து தயாரிக்கப்படுகிறது. வலிமையான பற்கள், ஆரோக்கியமான ஈறுகளைத் தருகிறது. வாய் நாற்றத்தை போக்குகிறது.

**நீலி பிருங்காதி தைலம்** — (கூந்தல் எண்ணெய்) — இள நரையையும் முடி உதிர்வதையும் தடுக்கிறது.



### ஆரோக்கிய டானிக்குகள்

**குல்கந்து** — சிறந்த மலமிளக்கி. புதிய ரோஜாப் பூக்கள், சர்க்கரை, தேன் ஆகியவை களைக் கொண்டு தயாரிக்கப்படுகிறது. கர்ப்பிணிகளுக்குச் சிறந்தது.

**அஸ்வகந்தா லேகியம்** — இரத்த சோகையைத் தடுக்கிறது. ரத்தத்தை சுத்தி செய்கிறது. உடலைத் தேற்றுகிறது.

**சௌபாக்கிய சுண்டி** — சிறந்த ஜீரண மருந்து. பிரசவத்திற்குப் பின் பயன்படுத்த மிக சிறந்தது.

**கருணை லேகியம்** — மூலத்தை தடுக்கிறது.

**தேத்தாங் கொட்டை லேகியம்** — நோயால் பாதிக்கப் பட்டவர்கள் உடல் தேற சிறந்த டானிக்.

**ரோஜாமொக்கு லேகியம்** — இரைப்பை புண்ணை ஆற்றுகிறது.

**கூஷ்மாண்ட லேகியம்** — பசியைத் தூண்டி ஜீரண சக்தியை அதிகரிக்கிறது பிரைமரி காம்ப்ளெக்ஸ் நோயைப் போக்கவும் பயன்படுகிறது.



**ஊட்டச் சத்து நிறைந்த புதிய சக்தி மால்ட் 4 வாசனைகளில் கிடைக்கிறது.**

**சமையல் பொடிகளும் தயார் செய்யப்படுகின்றன.**

காந்தி கிராமம் காந்தியின் லட்சியங்களின் வழியில் இயங்கி வருகிறது.

LSS

லெட்சுமி சேவா சங்கம்
காந்தி கிராமம் 624 302
மதுரை மாவட்டம் (தமிழ்நாடு)

கிடைக்குமிடம் : காந்தி கிராம அங்காடிகள் (ஷோரூம்)
(காந்தி கிராமம், மதுரை, திண்டுக்கல், வாடிப்பட்டி, கொடை ரோடு,
பழனி, திருநெல்வேலி, பள்ளப்பட்டி, அம்பாசமுத்திரம்) காதி கிராமோதயோக பவன்கள்,
சர்வோதய சங்கங்கள், எல்லா (டிரக்கிஸ்ட் & கெமிஸ்ட்) பிரபல மருந்து கடைகளிலும் கிடைக்கும்.

*இவைகளைத் தவிர சித்த, ஆயுர்வேத மருந்துகள் 250க்கும் மேற்பட்டவைகள் தயாராகிறது.*

maa(s) 8325 TAM

வட்ட மேஜை




# வரவர ரொம்பவும் சீரியஸ் ஆகிறீர்!

**எம். ஜி. ஆர். பேட்டி எப்போது?**

* சரித்திர புருஷர்களான காந்தி, காமராஜ்போன்றவர்கள் வாழ்ந்த காலத்தில் நாங்கள் பிறக்கவில்லையே என்ற தவிப்பைக் கர்நாடக முதல்வர் ஹெக்டே, 'இதோ நான் இருக்கிறேன்; நீங்கள் ஏன் விசனப்படுகிறீர்கள்?' என்று கேட்பதுபோல் இருக்கிறது.

வி. சந்திரசேகரன், மதுரை—1.

* கோவாச் சிறப்பிதழ், கர்நாடகா சிறப்பிதழ், கர்நாடக முதல்வரின் சிறப்புப் பேட்டி இவற்றைப் பார்க்கும்போது, தமிழகச் சிறப்பிதழும், தமிழக முதல்வரின் சிறப்புப் பேட்டியும் அச்சேற இயலாத நிலையில் தான் நாமும் முதல்வரும் இருப்பதை நினைக்கும் போது மனம் வெறுமையில் தள்ளப்படுகிறது.

கே. வி. எஸ். மணியன், குடியாத்தம்.

* பந்தாக்கள் எதுவுமில்லாத கர்நாடக முதல்வரைப் போலவே அவர் மனைவியும் தங்க நகைகள் எதுவுமே அணிவதில்லை என்று உறுதி பூண்டவர் என்ற விஷயம் பேட்டிக் கட்டுரையில் விட்டுப் போனதேன்?

ஜி. நீலா, மன்னார்குடி.

**பிரதமருக்கு அனுப்ப வேண்டும்?**

* 'தர்மத்தின் வாழ்வுதனை சூது கவ்வியது மட்டுமல்ல; கடித்துக் குதறிவிட்டது' என்ற வரிகளைப் படித்தபோது மனத்தில் துயரம்தான் பரவியது.

என். செந்தில்குமார், மயிலாடுதுறை—1.

*

* கல்கியின் அருமையான தலையங்கத்தை நமது பிரதமருக்கு மொழி பெயர்த்து அனுப்ப வேண்டும்.

என். நந்தா, திருச்சி.

**என்னய்யா கிண்டலா?**

* முதல்வர் சென்னையில் இருந்தபோது பைல்களெல்லாம் குதிரை வேகத்தில் ஓடியது போலவும், அவர் ஜப்பான், அமெரிக்கா என்று பயணம் போனதால்தான் பைல்களில் சிலந்தி வலை பின்ன எலிகள் நாற்காலியைப் பிடித்துக் கொண்டிருப்பதுபோல் கார்ட்டூன் போட்டிருக்கிறீரே! சிரிப்புத்தான் வருகிறது.

கலை மணாளன், இரணியல்.

**நீரும் அப்படித்தானா?**

* என்னய்யா வாசகர் கடிதத்தில் 'கல்வி கற்பிக்கும் ஆசிரியர்' என்பதற்குப் பதில் 'கல்வி கற்கும் ஆசிரியர்' என்று பிழையாகப் போட்டு அதற்குப் போய்ப் பரிசும் தந்திருக்கிறீரே! ஒருவேளை நீரும் 'கற்கும்' நிலையில்தான் இருக்கிறீரோ?

இரா. பழம், மயிலாடுதுறை.

**லங்கேஷைப் பின்பற்றுங்கள்!**

* அரசியல்வாதிகளோடு நெருங்கிப் பழகினால் நமது எழுத்துச் சுதந்திரத்திற்கு முட்டுக் கட்டையாகி விடும் என்று கூறும் லங்கேஷ் அவர்களின் கருத்தைத் தமிழ்ப் பத்திரிகை ஆசிரியர்கள் கட்டாயம் கடைப் பிடிக்க வேண்டும்.

ஆர். கே. லிங்கேசன், எம். கே. புதூர்.

**நேரங்காலம் இல்லையா?**

* தீபாவளி நெருங்கும் சமயம் பார்த்தா பட்டுப் புடவைகளைப் பற்றிய கட்டுரை? பாவம் சார் குடும்பத் தலைவர்கள்!

ஐயாறு எஸ். வாசுதேவன், சென்னை—91.

**ஒரே சீரியஸ் மயம்!**

* கல்கியைக் கையில் எடுத்தால் ஒரே சீரியஸ்தான். ஏன் எங்களைச் சிரிக்க வைக்கக் கூடாதா?

பி. சுவாமிநாதன், கும்பகோணம்.

**கல்லூரித் தேர்தலா இப்படி?**

இப்பொழுதெல்லாம் கல்லூரி மாணவர் பேரவைத் தேர்தல்கள் பொதுத் தேர்தல்களைப் போலவே எல்லாவிதக் கீழ்த்தர அம்சங்களையும் பெற்று, சட்டங்களை மீறியும், அமைதிக்குப் பங்கம் ஏற்படும் விதத்திலும் நடப்பதே வழக்கமாகி விட்டது. நாளுக்கு நாள் அரசியல் கட்சிகளின் தலையீடுகளும் அதிகரித்து வருகின்றன. இத்தேர்தல்களில் வெற்றி பெறுவதற்காகக் குறைந்த பட்சம் 5,000 ரூபாய் வரை செலவழிக்கப்படுகிறது. தேர்தல் நாள் அன்று மாணவர்களுக்கு பேனா முதல் பிரியாணி, சிகரெட், சாராயம் என வழங்கப்படுவதுதான் முக்கியமான செலவு!

இவ்வாறெல்லாம் செலவழிக்கும் தொகையை பி. காம்., பி. எஸ்ஸி, சீட்டுக்களை தங்கள் கோட்டாவின் மூலம் விற்று, பேரவை விழாக்களில் பணம் சுருட்டி மீண்டும் பெற்றுவிடுகின்றனர். இவர்களில் பாதிப்பேர் எதிர்காலத்தில் எம்.எல்.ஏ. எம். பி. ஏன் மந்திரியாயும் ஆகிவிட வாய்ப்பு உண்டு. மாணவர்களின் உரிமைக்காகப் போராடும் அமைப்பாக இருந்த பேரவைகள் நாளைய ஊழல் அரசியல்வாதிகளையும், சுயநலக்காரர்களையும் உருவாக்கும் ஓர் அமைப்பாக மாறிவிட்டது. இத்தகைய நிலையில் கல்லூரி பேரவைத் தேர்தல்கள் அவசியம் தானா? சம்பந்தப்பட்டவர்கள் சிந்தித்து, சீரிய நடவடிக்கை எடுக்க வேண்டும்.

து. ரவி, திருப்புத்தூர் (ப.மு.)

(இக்கடிதம் பரிசு பெறுகிறது)

மறுநாள் காலையில் வாசலில் மலர்த்த விருக்கும் கோலத்திற்காகக் கோல நோட்டை ஆராய்ந்து கொண்டிருந்தவள், ''புவனா...!'' என்ற குரல் அருகில் கேட்டதும் தலை நிமிர்த்தி......

''ஹாய் வசந்தி.....!'' என்று கண்களை சினிமாஸ்கோப்பாய் விரித்தாள்.

''புவனா! நான் ஒண்ணு கேட்டாத் தப்பா நினைக்க மாட்டியே?''

''என்னடி பீடிகை போடறே.... என்ன கேட்கப்போறே....?'' வசந்தியின் விழிகளைக் கூர்ந்தாள் புவனா.

''உனக்கும் உன் வீட்டுக்காரருக்கும் உறவு சுமுகமாகத்தானே இருக்கு....?''

''ஆமா... அதிலென்ன சந்தேகம் உனக்கு?''

''சந்தேகம் வரப்போய்த்தான் கேட்கிறேன்!''

''என்னடி சொல்றே?''

''கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி நானும் என் வீட்டுக்காரரும் மெயின் கார்ட் போயிருந்தோம். ஹோட்டல் பத்மாவிலே காப்பி சாப்பிட்டு நாங்க வெளியே வர்றப்ப உன் வீட்டுக்காரர் தன்னோட ஸ்கூட்டரிலே ஒரு பெண்ணை ஏத்திக்கிட்டுப் போய்க்கிட்டிருந்தார். அப்படி ஒண்ணும் அவ பிரமாதமான அழகி இல்லே. சுமாராத்தான் இருந்தா. இருந்தாலும் உன் கண்வரோட தோளிலே கை போட்டு அவ நெருங்கி உட்கார்ந்து போன



# இவருக்கு நான் என்ன குறை வைத்தேன்?

எஸ். பாலகிருஷ்ணன்

தைப் பார்த்ததும் எனக்கு உன் ஞாபகம்தான் வந்தது. புவனா! 'லேட் ரியலைஸேஷன் நெவர் பேய்ஸ்'னு சொல்வாங்க. அது இந்த ஆம்பளைங்க விஷயத்திலே நூத்துக்கு நூறு பொருந்தும். பார்த்து ஜாக்கிரதையா நடந்துக்கோ.'' சொல்லிவிட்டுத் தன் வீட்டை நோக்கிப் பாய்ந்தாள் வசந்தி.

'இவருக்கு நான் என்ன குறை வைத்தேன்? எதிலே குறை வைத்தேன்? சிந்தனையைத் தொடர்கதையாக்கியவாறே வாசலில் அமர்ந்திருந்தவள்.....

'ஹார்ன்' சப்தம் கேட்டதும் எழுந்து வீட்டுக்குள் நுழைந்தாள்.

என்ஜினை ஆஃப் செய்து ஸ்கூட்டரை நிறுத்தியவன்.....

வீட்டினுள் பாய்ந்து வழக்கம்போல் புவனாவை அணைக்க முற்பட்டபோது.....

சமயோசிதமாய் விலகிக் கொண்டாள்.

''புவனா, என்ன ஆச்சு உனக்கு?'' என்றான் மோகன்.

''ஒண்ணுமில்லையே.....!''

''வழக்கமா ஏத்துப்பே. இன்னிக்கு ஏன் என்னவோ போல் நடந்துக்கறே?''

''நான் சரியாகத்தான் நடந்துக்கறேன்!'' நானில் அதிகமாய் அழுத்தம் கொடுத்துச் சொல்லிவிட்டு அடுப்பறையை நோக்கி நகர்ந்தாள்.

* * * * *

அடுத்த நாள்.

இரவு மணி 8.00.

அழைப்பு மணி அலற....

கதவைத் திறந்தாள் புவனா.

எதிரே ஜெயா — பக்கத்து வீட்டுக்காரி.

''புவனா! ஒரு விஷயத்தை உன்னோட உடனடி கவனத்துக்குக் கொண்டு வரலாமேன்னு தான் வந்தேன்.....!''

''என்ன விஷயம்?''

''இன்னிக்குச் சாயந்தரம் ஆறுமணி வாக்கிலே மெயின் கார்ட் கேட்டிலே உன் வீட்டுக்காரர் தன்னோட ஸ்கூட்டரிலே ஒரு பொம்பளையோட போய்க்கிட்டிருந்தாராம். அவளைப் பார்த்தால் நாடக நடிகையாட்டம் இருக்காம். உன்னைக் கல்யாணம் பண்ணி இன்னும் ஒரு 'வெட்டிங் அனிவர்ஸரி' கூடக் கொண்டாடலே..... அதுக்குள்ளார இப்படியா?''

'என்ன ஆயிற்று இவருக்கு? அப்பாவுக்குக் கடிதம் எழுதலாமா? ஊஹூம். பொறுமை கடலினும் பெரிது. இன்னும் கொஞ்சம் பொறுத்துப் பார்க்கலாம்!'

* * * * *

மறுநாள்.

இரவு மணி 9.00.

வாசலில் அமர்ந்து பாலகுமாரனின் கதையொன்றைச் சுவைத்துக்கொண்டிருந்த புவனா 'ஹார்ன்' சப்தம் கேட்டு நிமிர்ந்த பொழுது...

பில்லியனில் ஒரு பெண்!

பற்றிக் கொண்டு வந்தது புவனாவுக்கு.

'இனி இந்த வீட்டில் ஒரு நிமிடம் தங்கக் கூடாது. கட்டிய மனைவி கல்லாட்டம் இருக்கும்போது சீர்கெட்ட சிறுக்கியை வீட்டுக்கே அழைத்து வருவதென்றால் என்ன தைரியம்?'

விடுவிடென்று வீட்டினுள் நுழைந்து புவனா ப்ரீஃப் கேஸினுள் துணிமணிகளை அள்ளித் திணிக்கத் துவங்கியபோது....

வீட்டினுள் அப்பெண்ணுடன் நுழைந்த மோகன், ''நீ போய் அந்த ரூமிலே ட்ரெஸ் மாத்திக்கோ!'' என்று சொல்லிவிட்டுச் சாவகாசமாய்ச் சிகரெட் ஒன்றைப் பற்ற வைத்தான்.

பூரணமாய் இரண்டு நிமிடங்கள் கரைந்ததும்....

''உங்களுக்கு இவ்வளவு தைரியம் வந்த அப்புறம் நான் இனிமேல் உங்ககூட வாழறதிலே எந்தவித அர்த்தமுமில்லை. அதனாலே நான் எங்க வீட்டுக்குக் கிளம்பறேன்!''

''புவனா! கிளம்பறதுக்கு முன்னாடி ஒரேயொரு தடவை திரும்பிப் பார்க்கிறியா?'', மோகனின் விழிகளில் கெஞ்சல்.

திரும்பிய புவனா.....

அப்படியே நின்றாள்.

'யார் இவன்? உள்ளே நுழைந்த பெண் எங்கே?' புவனா சிந்தித்துக் கொண்டிருந்த போது.....

அருகில் வந்த மோகன், ''புவனா! இவன் என் ஃப்ரெண்ட் பிரபு. நாடகங்களிலே பெண் வேஷம் போட்டு நடிக்கிறவன். யார் யாரோ சொன்னதைக் கேட்டு உன் மனசு பாதிக்கப்பட்டிருக்குன்னு நேத்தும் முந்தாநாளும் நீ நடந்துக்கிட்ட விதத்திலேயிருந்து தெரிஞ்சுக்கிட்டேன். உனக்கு உண்மை நிலையைப் புரிய வைக்கணும்என்கிறதுக்காகத்தான் நீ வெறுக்கிற அந்தப் பெண்ணை ஸ்கூட்டரிலே ஏத்திக்கிட்டு வீட்டுக்குக் கூட்டிக்கிட்டு வந்தேன். வர்ற ஞாயிற்றுக்கிழமை ரஸிக ரஞ்சனி சபாவிலே நடக்கப்போற இவங்க ட்ரூப்போட நாடகத்துக்கு முந்தா நாளிலே இருந்து 'ரிஹர்ஸல்'. ரிஹர்ஸல் முடிஞ்சு இவனை அப்படியே பெண் வேஷத்திலே ஸ்கூட்டரிலே உட்கார வைச்சுக் கூட்டிக்கிட்டுப் போனதைப் பார்த்தவங்கதான் உனக்குத் 'தூபம்' போட்டிருக்கணும். 'ரிஹர்ஸல் முடிஞ்சதும் மேக்கப்பைக் கலைச்சுட்டு ஆம்பளை வேஷத்திலே பில்லியனிலே உட்கார வைச்சுக் கூட்டிக்கிட்டுப் போனா உங்களுக்கென்ன கொள்ளை'ன்னு நீ கேட்கலாம்.... வாஸ்தவமான கேள்வி. ஆனா என் கைவசம் ஒரேயொரு ஹெல்மெட். அவன்கிட்டே ஹெல்மெட் கிடையாது. புதுசா வந்திருக்கிற சட்டப்படி பில்லியனிலே உட்கார்ற ஆம்பளை ஹெல்மெட் மாட்டணும். ஆனா பொம்பளை மாட்ட வேண்டாம். இந்த ஒரே காரணத்துக்காகத்தான் அவனை பொம்பளை வேஷத்திலேயே ஸ்கூட்டரிலே அழைச்சுக்கிட்டுப் போனேன். அது இவ்வளவு விபரீதமாயிடுச்சு!'' என்றான்.

ப்ரீஃப் கேஸை வீசிவிட்டு ஓடிச் சென்று மோகனின் மார்பில் முகம் புதைத்தாள் புவனா.

# ஹாட் லைன்



கமலை போன்ற பிரசித்தி பெற்றவனுக்கு இது (ஸாரிகா தொடர்பு) போன்ற நிகழ்வுகள் வாழ்க்கைச் சம்பவத்தில் தவிர்க்க முடியாது. எனக்குத் தெரிந்து நீதிபதிகள், வக்கீல்கள், சமூக முக்கிய பிரமுகர்கள் உயர் அதிகாரிகள் போன்றோருக்கு இரண்டு மனைவிகளும், பல பெண்களுடன் வாழ்க்கையும்உண்டு-அவர்களும்வாழ்ந்துவருகிறார்கள்.

— சாருஹாசன்.

தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம் வெளிவிடவிருக்கும் அகராதி தமிழைக் கொலை செய்வதற்காகவே வெளி வருவதாகத்தெரிய வருகிறது. பல்லாயிரம் ஆண்டுகளாகத் தமிழ்ச்சான்றோர்களால்காப்பாற்றப்பெற்று வந்த தமிழ் மொழியை நேற்றுத் தோன்றிய தமிழ்ப் பல்கலைக் கழகத்திலுள்ள சில தமிழ்ப் பகைவர்கள் அழிக்கத்துணிந்திருப்பதுவியப்பைத் தருகிறது.

— கி. ஆ. பெ. விசுவநாதம்.

என் தெய்வத்துக்குத் திருமணமா? என்றால் தாங்க முடியவில்லை. ஸ்ரீதேவியைப் பிரிந்துஎன்றால்வாழமுடியாது.என்னுடைய நிலை என்ன ஆகும் என்று என்றால் எண்ணிப் பார்க்க முடியவில்லை. என்னுடைய பன் - பட்டர் - ஜாம் எல்லாம் ஸ்ரீதேவி தான். கடவுளே, நான் என்ன செய்வேன்?

— ஜிதேந்திரா.

யாராவது என்னைச் சீண்டிவிட முயன்றால் அவர்களை நான் விடமாட்டேன். அவர்களை ஒழித்தே தீருவேன். யாருக்கும் நான் அஞ்சமாட்டேன். புரட்சித்தலைவர் பார்த்து எனக்கு அந்த (முதல்வர்)ப் பதவி தந்தால் நான் ஏற்கத் தயார் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

— ஆர். எம். வீரப்பன்.

கலைஞர் மட்டும் ஆட்சியில் இருந்து சுட்டு விரலை அசைத்திருந்தால் இந்நேரம் ஜெயவர்த்தனாவின் உடல் பிணமாக்கப்பட்டு எரிக்கப்பட்டு இருக்கும்.

— டி. ராஜேந்தர்.

# காட்டுக்குள்ளே திருவிழா

**3D படம். 3D விமரிசனம். ஸ்பெஷல் கண்ணாடி அணிந்து படிக்கவும்!**

பௌபௌர்ர்ணணமிமி, ககட்டடிடில்ல், சிசிங்ககம்ம், நைநைலலக்க்ஸ்ஸ், அஅரரண்ண்மமனைனை, ககரரடிடி, பாபாண்ண்ட்ட், பாபாழ்ழ் கோகோயியில்ல், அஅரைரை குகுறைறை அஅனுனுராராதாதா, வேவேஷஷ்டிடி குகுதிதிரைரை, ககத்த்திதி ககபாபுாலலம்ம், ரரத்த்திதினனம்ம், சிசிறுறுத்த்தைதை, ககன்ன்னினி பூபூஜைஜை, நீநீப்ப்பபந்ந்ததம்ம், யாயானைனை, அஅய்ய்யோயோ! அஅய்ய்யோயோ!! அஅய்ய்யோயோ!!!

(இனி 3D கண்ணாடியை கழற்றலாம்).

படத்தை ஒரே தடவை பார்த்துக் கதை சொல்லத் தெரிந்தவருக்கு வடபழனி ஸ்டுடியோக்கள், மவுண்ட் ரோடு தியேட்டர்கள் அனைத்தும் இனாம்! இனாம்! இனாம்!





# ஈட்டி

'யானைக்கொரு கொணம். நல்லதைச் சொல்லிக் கொடுத்தா, மறக்காமல் தானே செய்யும். யாராச்சும் தீங்கு செய்ஞ்சிட்டாங்களோ, அவங்களைத் தேடித் தேடிப் பழி வாங்கினப்புறம்தான்நிக்கும்' என்றுகதைக்கு ஒரு முன்னோட்டம் கொடுத்துவிடுகிறார்கள்.

விஜய்காந்த் எனும் வேலன் நாகமலைக் காட்டிலேயே (காட்டின் பெயர் சரிதானே?) கொடிய மிருகங்களை வேட்டையாடுவதில் எக்ஸ்பர்ட்டாம். டயலாக்கில் சொன்னதோடு நிறுத்தியிருக்கலாம். கையில் ஒரு ஈட்டியைக் கொடுத்து ஈ காக்கை இல்லாத மரங்கள் வழியே ஓடு ஓடு என்று ஓடிக் காட்டி வேட்டையைக் கேலி பண்ணியிருக்க வேண்டாம். சத்யராஜை யானை துரத்தியது. விஜய்காந்த் காப்பாற்றினார் என்று ஏதோ பேசிக் காட்டுகிறார்கள். இவ்வளவு பெரிய காடு. இவ்வளவு திறமையான வேட்டைக்காரன்— பேருக்கு ஒரு குரங்கையாவது கண்ணில் காட்ட வேண்டுமே, ஊம்ஹூம்.

விஜி எனும் வள்ளி வி. காந்தின் முறைப் பெண். மச்சான் தூங்கிய பிறகு ரகசியமாய் முத்தம் கொடுக்கிறாரே, அந்தக் காட்சி பரவாயில்லை. மற்றபடி வெட்கம், கோபம், சோகம் எல்லாமே இவர் முகத்திலிருந்து 'டாட்டா, பைபை'. நெடுநெடுவென்ற சத்யராஜுக்குக் கூட சவசவ பாத்திரம்.

கிராமத்திற்குப்போய் ஆராய்ச்சி பண்ணி, இன்ஸ்பெக்டரைக் காதலிக்கும் வேலை — ஊரி வேலையின்மை நளினிக்கு. தமிழ்நாடு முழுவதற்கும்ஒரே இன்ஸ்பெக்டராய்எங்கும் போலீஸ் தரப்பில் ஆஜராகும் இன்ஸ்பெக்டர் விஷ்ணுவர்த்தன். ஆரம்ப சண்டைக் காட்சி மட்டும் தூள்.

ரங்கா பாதிப் படத்திற்கு மேல் காடுகளின் (?) அரையிருட்டிலேயே காமிராவைச் சமாளித்திருக்கிறார்.

பொடியன் விமலும், அவன் கூடவே குரைத்துக் கொண்டிருக்கும் நாயும் தேவலாம். நன்றாய் நடித்திருக்கிறார்கள். அதுவும் லிஃப்ட்டில் ஏறித் தப்பிக்க நினைக்கும் திலீப்பைப் படிகள் ஏறியே நாய் துரத்தும் ஸீன் விறுவிறு. கவுண்டமணியும் பல் பிடுங்கிய பாம்பு.

இளையராஜா வழக்கமான இனிய டமாரங்களைத் தட்டுகிறார். படத்தோடு சேர்த்து நம்மை இன்வால்வ் செய்யவில்லையே டைரக்டர் — ஏன் என்று பார்த்தால்......

திரைக்கதைக்கு நிறைய டானிக்கும், சத்துணவும் தேவை.

— ஜெயமன்மதன்



# பயமுறுத்தும் மனிதர்!

'எனக்குக் கலெக்டர் பதவி தர வேண்டும். இல்லையென்றால் சாகும்வரை உண்ணாவிரதமிருக்க அனுமதி தர வேண்டும்' என்று ஜனாதிபதிக்குத் தந்தியடித்துக் கொண்டு கடந்த பத்து மாதங்களாக வேலைக்குப் போகாமல் அரசாங்கத்தையே பயமுறுத்திக் கொண்டிருப்பவர் வி. கோபாலன். திருவள்ளூரில் குமாஸ்தாவாக இருக்கும் இவரைச் சந்தித்தபோது.......

"நான் 1957–ல் ஆந்திரா பப்ளிக் சர்வீஸ் கமிஷனால் ஜூனியர் அஸிஸ்டென்டாகத் தேர்ந்தெடுக்கப்பட்டேன். 58–ல் அப்பாயின்மென்ட். பிறகு தமிழ்நாடு வருவாய்த் துறைக்கு மாற்றலானேன். அப்போது புதிதாகப் பஞ்சாயத்து வளர்ச்சிப் பிரிவு ஆரம்பிக்கப்படவே அங்கு எனக்குப் பதவி உயர்வு கொடுத்து மாற்றினார்கள். சில ஆண்டுகள் கழித்து எனது பதவி உயர்வை ரத்து செய்து மீண்டும் வருவாய்த் துறைக்கே மாற்றிவிட்டார்கள். இதனால் சீனியாரிட்டியில் பின்தங்கிப் போனேன்.

"இந்த நிலையிலும் நான் பதவி உயர்வுக்கான தேர்வுகள் எழுதி பாஸ் செய்தேன். ஆனாலும் என் சீனியாரிட்டியில் எந்தவித முன்னேற்றமும் இல்லை. நியாயப்படி பார்த்தால் 71–ல் நான் துணை தாசில்தாராகப் பதவி உயர்வு பெற்றிருக்க வேண்டும். 73–ல் தாசில்தாராகிப் பின் மாவட்ட வருவாய் அதிகாரியாகி, 82–ல் ஐ.ஏ.எஸ். லெவலுக்கு உயர்ந்திருக்க வேண்டும். ஆனால் நான் கடந்த இருபத்தேழு ஆண்டுகளாக குமாஸ்தாவாகத்தான் இருக்கிறேன். இது விஷயத்தில் அநீதி இழைக்கப்பட்டுவிட்டது.

"இதற்கெல்லாம் ஒரு முடிவு கேட்டு நான் பக்ருதீன் அலி அகமது ஜனாதிபதியாயிருந்த போதிலிருந்து இன்று ஜெயில் சிங் வரை பலமுறை தந்திகளும் மகஜர்களும் அனுப்பியிருக்கிறேன். இதற்காக மட்டும் சுமார் மூவாயிரம் ரூபாய்வரை செலவழித்திருப்பேன் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்! ஆனாலும் என் பிரச்னை தீர்த்தபாடில்லை.

"சமீபத்தில் கூட ஜனாதிபதி ஜெயில் சிங் அவர்களுக்கு விவரமான கடிதம் ஒன்று அனுப்பியிருந்தேன். அதில், 'எனக்கு நீதி வழங்கப்பட வேண்டுமென்றும் இல்லையெனில் சாகும்வரை உண்ணாவிரதமிருக்க அனுமதிக்க வேண்டுமென்றும் கேட்டிருந்தேன். அக்கடிதம் தமிழக அரசின் தலைமைச் செயலாளருக்கு அனுப்பப்பட்டுவிட்டதாகவும் இனி நான் அவரைத் தொடர்பு கொள்ள வேண்டுமென்றும் ஜனாதிபதியிடமிருந்து பதில் வந்திருக்கிறது. இப்போது தலைமைச் செயலாளரிடமிருந்து வரப்போகும் பதிலைத்தான் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்!" என்றார். கணவனின் செயல் அனைத்தும் நியாயமானதுதான் என்று இவரது மனைவியும் அடித்துச் சொல்லுகிறார்.

கோபாலனுக்கு இரண்டு மகன்; மூன்று மகள். இந்த நிலையில் — கடந்த பத்து மாதங்களாக வேலைக்குப் போகாத நிலையில் குடும்பத்தை எப்படிச் சமாளிக்கிறார்கள்? ரொம்பவும் கஷ்டமான ஜீவனம்தான். மனைவியின் உறவினர்களிடமிருந்து அவ்வப்போது வரும் உதவிகளை எதிர்பார்த்துக் கொண்டுதான் காலம் தள்ளுகிறார்கள்.

எஸ். எஸ். எல். ஸி. படித்துவிட்டு குமாஸ்தாவாகச் சேர்ந்த இவர் கலெக்டர் பதவி அளவுக்குப் பதவி உயர்வு கிடைக்க வேண்டும் என்று சொல்வது எந்த விதத்தில் நியாயம்? அப்படி வேறு பலர் அரசு ஊழியத்தில் பரபரவென்று பதவி உயர்வுகளைப் பெற்றிருப்பதால்தான் இவர் கேட்கிறார்! ஆக, கோளாறு எங்கே? இவரிடமா, அரசின் பாரபட்சப் போக்கிலா?

சந்திப்பு: மௌனஷ்மி

படம்: தேவா

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032· (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani Editor: K. Rajendran

# NEW!

# POWER PACKED SURF




புதிய பவர் பேக்டு ஸர்ஃப்.

பூரிக்குது இதன் புத்தமைப்பு சக்தி, பொங்குது இதுவரை இல்லாத ஏற்றமான ஆற்றல்: ஆழ ஊடுருவித் துப்புரவாக்குகிறது—உங்கள் வெள்ளைத் துணிகள் எல்லாம் ஒப்பற்ற வெள்ளை-வெளேர், வர்ணத் துணிகளோ உன்னத ஒளிமயம்.

அதே சமயம், துணிகளின் புதுமை காத்து நெடுநாள் வாழ்விக்கிறது! வெளுக்கும் ஒவ்வொரு சட்டையும் ஒவ்வோர் ஆடையும் வெண்மை மிடுக்கு, புதுமைக் கருக்கு ..புத்தாடைபோல் வெளுப்பு...

சலவைக்கு சலவை பொலியும் புதுமை!

**புதுமை தவழும் புதுமணம்:** கமழ்ந்த வண்ணம் இருக்கும் உங்கள் துணிகள்மீது—சுத்தம் தவழும் புத்தம் புதுமை, பக்கத்தில் இருப்பதே இனிமை.

**ஜோரான புதிய பேக்:** சக்திச் சுரங்கமான இத் தயாரிப்புக்கு உற்ற பொருத்தம்.

வாரீர் இன்றே வாங்கிக்கொள்வீர் பவர் பேக்டு ஸர்ஃப்.

**ஸர்ஃப் சலவை: ஒப்பற்ற வெள்ளைவெளேர், சகல துணிகளுக்கும் புதுமை ஜோர்!**

LINTAS-SU-325-2416 TM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

GISTERED No. M 4392
istered as a Newspaper in Sri Lanka

